என்னலை - எண்ணத்தையுடையை, 'நீயே பேரெண்ணலையே' கங்அ.
எண்மை - எளிமை, 'இக்குடிப் பிறந்தோர்க் கெண்மை காணுமென' சங.
எதிர்ந்த - மாறுபட்ட, 'செய்வினைக்கெதிர்ந்த தெவ்வர்' சா.
எதிர்ந்து - ஏற்றுக்கொண்டு, 'புரவெதிர்ந்து' ருச; 'போரெதிர்ந் தென்னை போர்க்களம் புகினே' அச; மாறுபட்டு, 'கடுமான் கோதை துப்பெதிர்ந் தெழுந்த' ருச; 'போரெதிர்ந்து' அஎ.
எந்திரம் - பொறி, 'திங்களு நுழையா வெந்திரப் படுபுழை' கஎ.
எந்தை - என் தலைவன், 'எந்தையொடு கிடந்தோரெம் புன்றலைப் புதல்வர்' கக
எம்மனோர் - எங்கள், 'எம்மனோர்க்கொருதலை கைம்மூற்றலை' ருங.
எம்மோன் - எம்முடைய தலைவன், 'எம்மோன் ......... குறவர் பெருமகன்' கருஎ.
எய்த - அணுக, 'எய்த வந்தனம் யாம்' க0.
எய்ம்மான் - எய்ப்பன்றி, 'எயினர் தந்த வெய்ம்மா னெறிதசை' கஎஎ.
எய்யாதாகின்று - அறியாததாயிற்று, 'விளத்த - லெய்யா தாகின்றெஞ் சிறுசெந் நாவே' கசஅ.
எயில் - பாண்டியநாட்டு ஊர்களுளொன்று, 'மன்னெயி லாந்தையும்' எக; மதில், 'எயிற்கதவு' ங; 'ஆரெயில்பல தந்து' ச.
எயிற்றி - மறத்தி, 'கருங்க ணெயிற்றி' கருக.
எருக்கிய - அறைந்துகொண்ட, 'ஊழி னுருப்ப வெருக்கிய மகளிர்' உஙஎ.
எருத்தம் - கழுத்தம், 'இகழ்பாடுவோ ரெருத்தமடங்க' ச0.
எருத்து - கழுத்து, 'எருத்து வவ்விய புலிபோன்றனன்' ச.
எருவை - தலைவெளுத்து உடல் சிவந்திருக்கும்பருந்து; கழுகுமாம், 'விசும்பா டெருவை பசுந்தடி தடுப்ப' சுச.
எல் - பகற்பொழுது, 'எல்லடிப் படுத்த' கஎ0; விளக்கம், 'எல்லுப்பட விட்ட சுடுதீ' கக.
எல்லரி - சல்லியென்னும் வாத்தியம், 'எல்லரி தொடுமின்' கருஉ.
எல்லை - பகல், 'எல்லையு மிரவு மெண்ணுய்' எ.
எவ்வி - ஒருவேள், 'மாவே ளெவ்வி - புனலம் புதவின் மிழலை' உச; இரும்பா ணொக்கற் றலைவன் பெரும்பூட் போரடு தானை யெவ்வி' உகங.
எழில் - உயர்ச்சி, 'பகட்டெழின்மார்பு' கங; பெருமை, 'அறுமருப் பெழிற் கலை' உங.
எழிலிய - எழில்பெற்ற. 'அம்பகட்டெழிலிய செம்பொறி யாகத்து' சுஅ.
எழினி - ஒருவள்ளல், 'ஊரா தேந்திய குதிரைக் கூர்வேற் கூவிளங் கண்ணிக் கொடும்பூ ணெழினியும்' கருஅ; 'வையகம் புகழ்ந்த வயங்குவினை யொள்வாட் பொய்யா வெழினி' உங0; இவனை எழினி அதியமானென்றும் கூறுவர்.
எழு - கணையமரம், 'காப்புடைய வெழு முருக்கி' கச; 'எழுவுறழ் திணிதோள்' ஙக.
எள்ளிய - இகழ்ந்த, 'உள்ள மெள்ளிய மடவோன்' எங.
எறிச்சிலூர் - இது கோனாட்டிலுள்ள ஊர்களுளொன்று, ருச, சுக, கசஎ.
எறித்தல் - உறைத்தல், 'நாடுசுடு கமழ் புகை யெறித்த லானே' ச.
எறிதல் - அடித்தல், 'எறிகோ லஞ்சா வரவி னன்ன' அக.
எறிந்த - அறைந்த, 'விளங்குபொன் னறை நலங்கிளர் பலகை' கரு; கடைந்து செறிக்கப்பட்ட, 'யானை வான்மருப் பெறிந்த வெண்கடைக் கோணிறை துலாம்' ஙக.
எறிந்து - வெட்டி, 'எறிந்துகளம் படுத்த வேந்துவாள்' கக.
எறியா - முறித்து, 'களிறே - கதவெறியாச் சிவந்து' ச.
எறும்முன்பு - மிக்கவலி, 'தோல்பெயரிய வெறும்முன்பு' எ.
என்குவை - என்று வினவுவாய், 'இவன்யா ரென்குவையாயின்' கங.
என்றூழ் - கோடை, 'வெண்கிடை - யென்றூழ் வாடுவறல்' எரு; 'வளமழை மாறிய வென்றூழ்க்காலை' கசுக.
என்னதூஉம் - சிறிதும், 'என்னதூஉங் கடிமரந் தடித லோம்பு' ருஎ.
என்னை - என்னிறைவன், 'அணங்கருங் கடுந்திறலென்னை' எஅ; 'நினையொ

டு வரூஉ மென்னைக்கு' ௨௬௨.

எனவ - என்னுடையன சிலவார்த்தை, 'எனவ கேண்மதி' ௩௫.

## ஏ.

ஏணி - எல்லை, 'நளியிரு முந்நீ ரேணி யாக' ௩௫; 'முந்நீ ரேணி' ௧௩௭.

ஏத்தி - வாழ்த்தி, 'மூன்றுறை நுண்பல மணலினு மேத்தி' ௧௩௬.

ஏத்துகம் - புகழ்வோம், 'ஏத்துகம் பலவே' ௧௦.

ஏதின்மாக்கள் - அயலோர், 'ஏதின் மாக்கள் பொதுமொழி கொள்ளாது' ௫௮.

ஏந்திய - ஓங்கிய, 'நிலனேந்திய விசும்பு' ௨.

ஏமம் - காவல், 'எல்லா வுயிர்க்கு மேமமாகிய' ௧; 'ஏம முரச மிழுமென முழங்க' ௩.

ஏமாந்த - ஆசைப்பட்ட, 'அருந்தே மாந்த நெஞ்சம்' ௧௦௧.

ஏமாந்து - இன்புற்று, 'காமர் நெஞ்ச மேமாந் துவப்ப' ௧௯௮.

ஏமுற்று - இன்பமுற்று, 'ஏமுற்றுக் கழிந்த மள்ளர்க்கு' ௮௪.

ஏய்ப்ப - ஒப்ப, 'அலவிப் பாவை யாடுவனப் பேய்ப்ப' ௩௩.

ஏர்தல் - எழுதல், 'ஏர்தரு சுடரின்' ௧௫௫.

ஏறு - இடபம், 'ஊர்தி வால்வெள் ளேறே' ௧; இடி, 'அதிர்குர லேறொடு துளிசொரிந் தாங்கு' ௧௯௦; எறிதல், 'பருந்தி னேறு குறித்து' ௪௩.

ஏறை - ஏறைக்கோன், 'பெருங்க ணுடனெம் மேறைக்குத் தகுமே' ௧௫௭.

ஏனல் - தினை, 'ஏனல் காப்போர்' ௨௮.

## ஐ.

ஐயவி - வெண்சிறுகடுகு, 'ஐயவி புகைப்பவும்' ௯௮.

ஐயூர் - ஓரூர், ௨௧, ௫௧, ௨௨௮, ௩௧௪.

ஐவனம் - மலைநெல், 'ஐவனம் வித்தி' ௧௫௯.

## ஒ.

ஒக்கல் - சுற்றம், 'இல்லோ ரொக்கற் றலைவ' ௯௫.

ஒக்கலை - சுற்றத்தையுடையை, 'பெரும்புல் லென்ற விரும்பே ரொக்கலை' ௬௯.

ஒக்கூர் - ஓரூர், ௨௭௯.

ஒசிய - முறிய, 'இருதலை யொசிய வெற்றி' ௮௦.

ஒடியா - இடையறாத, 'ஒடியா முறையின்' ௨௯.

ஒடுக்கம் - ஒடுங்கியநிலை, 'வல்வின் மறவ ரொடுக்கங் காணாய்' ௨௫௯.

ஒடுங்கா - மடியாத, 'ஒடுங்கா வுள்ளத்து' ௮.

ஒண்மை - விளக்கம், 'ஒள்ளழல்' ௧௧.

ஒத்தி - ஒப்பை, 'யாங்கன மொத்தியோ' ௮.

ஒதுக்கு - இயங்குதல், 'ஒதுக்கின் றிணிமணற் புதுப்பூம் பள்ளி' ௩௩; நடை, 'தகைமெல் லொதுக்கின் வளைக்கை விறலி' ௧௩௫.

ஒதுங்கி - நடந்து, 'கோல்கா லாகக் குறும்பல் லொதுங்கி' ௧௫௯.

ஒப்ப - தக, 'ஒப்ப நாடி' ௧௦.

ஒய்யென - விரைய, 'ஐயவிப் புகையுந் தாங்கா தொய்யென' ௯௮.

ஒரா - தப்பாத, 'நிலைக்கொராஅ விலக்கம்' ௪.

ஒரீஇ - தப்பி, 'கூருகிர்ப் பருந்தி னேறு குறித்தொரீஇ, ௪௩; நீங்கி, 'சிறுமனை வாழ்க்கையி னொரீஇ' ௨௯; 'பெருநல் யாணரி னொரீஇ' ௫௨; 'தென்புலங் காவலி னொரீஇ' ௭௧.

ஒருசார் - ஒருபக்கம், 'ஒருசா ரருவி யார்ப்ப' ௧௧௫.

ஒல்கல் - தளர்தல், 'ஒல்க லுள்ள மொடு' ௧௩௫.

ஒல்லாய் - உடம்படாய், 'பாசறை யல்லது நீயொல் லாயே' ௩௧.

ஒல்லான் - உடன்படான், 'ஈண்டவ ரடுதலு மொல்லான்' ௭௮.

ஒல்லையூர் - ஓரூர்; இது பெருஞ்சாத்தனுடையது, 'முல்லையும் பூத்தியோ வொல்லையூர் நாட்டே' ௨௪௨.

ஒலிக்குந்து - தழைக்கும், உம் - உந்தாயிற்று, 'கழைக்கரும்பி னொலிக்குந்து' ௧௩௭.

ஒலித்தல் - தழைத்தல், 'ஒலிநெடும் பீலி' ௫௦.

ஒலிபு - தழைத்து, 'தோடொலிபு நந்தி' ௧௨௦.

ஒலிமென்கூந்தல் - தழைத்த மெல்லிய கூந்தல், ௧௪௬.

ஒலியல் - தழைத்தல், 'ஒலியற் கண்ணி' ௨௦௧.

ஒலியற்கண்ணி - தளிர்மாலை, உ0உ.
ஒலியன்மாலை - வளையமாலை, 'ஒலியன் மாலையொடு பொலியச் சூடி' எசு.
ஒழிய - சாக, 'ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழிய' உ.
ஒழுக - நடக்க, 'வையங் காவலர் வழிமொழிந் தொழுக' அ.
ஒழுகை - வண்டி, 'உப்போ யொழுகை' ககசு.
ஒளித்தி - ஒளிப்பாய், 'மலைமறைந் தொளித்தி' அ.
ஒளிர்வரூஉம் - விளங்கும், 'கண்ணொளிர் வரூஉங் கவின்சா பத்து' எ.
ஒளிறுதல் - விளங்குதல், 'ஒளிறுவாண் மன்னர்' கஎஎ.
ஒற்றி - சாய்த்து, 'திருந்தலை நோன் வெளில் வருந்த வொற்றி' சச.
ஒற்றிய - வீழ்த்த, 'புலிபார்த் தொற்றிய களிற்றிரை பிழைப்பின்' உகஎ.
ஒறுத்தி - தண்டஞ்செய்வை, 'அத்தக வொறுத்தி' க0.
ஒன்றுது - பொருந்தாது, 'நிரயங் கொள்பவரோ டொன்றுது' ரு.
ஒன்றுபட்டு - ஒருபெற்றிப்பட்டு, 'ஒன்றுபட்டு வழிமொழிய' கஎ.
ஒன்னுதோர் - பகைவர், 'இன்னும் பெருமநி னொன்னு தோர்க்கே' கூஉ.
ஒன்னர் - பகைவர், 'ஒன்னர் காடுசுடு கமழ்புகை' சு.

## ஓ.

ஓக்கிய - எடுக்கப்பட்ட, 'பொருநர்க் கோக்கிய வேலன்' சுகூ.
ஓங்கல் - உயர்தல், 'ஓங்கல் வெண்குடை' கூ.
ஓச்சி - எடுத்து, 'மதனுடை முழவுத் தோ ளோச்சி' ரு0.
ஓடை - யானை நெற்றிப்பட்டம், 'பொன்னோடைப் புகரணிநுதல்' கூ; 'ஒன்னுர் யானை யோடைப்பொன் கொண்டு' கஉசு; 'நோன்பக டொளிதிக ழோடை பொலிய' கசுக.
ஓப்புநர் - ஓட்டுவோர், 'நெல்லிளை கழனிப் படுபுள் ளோப்புநர்' உகூ.
ஓம்பா - பாதுகாவாத, 'ஓம்பா வீகை' அ.
ஓம்பாது - பாதுகாவாது, 'ஓம்பா தீயு மாற்ற லெங்கோ' உஉ; 'ஓம்பாது கடந்தட்டு' சு0.
ஓம்புற்ற - பாதுகாத்த, 'பிறரோம் புற்ற மன்னெயில்' சு0.
ஓய்தல் - செலுத்துதல், 'உப்போ யொழுகை' ககசு.
ஓர்க்கும் - செவிதாழ்த்துக் கேட்கும், 'இரும்புலிப் புகர்ப்போத் தோர்க்கும்' கருஎ.
ஓராங்கு - ஒருபெற்றிப்பட, 'ஓராங்கு மலைந்தன பெருமநின் களிறே' கசு.
ஓரி - ஒருவள்ளல், 'கொல்லி யாண்ட வல்வி லோரியும்' கருஅ; இவனை வல்விலோரியென்றுங் கூறுவர். தேன் முதிர்ந்தாற்பரக்கும் நீலநிறம்; முசுக்கலையுமாம், 'அணிநிற வோரி பாய்தலின் மீதழிந்து - திணிநெடுங் குன்றந் தேன்சொரி யும்மே' க0கூ.
ஓரியர் - சக்கரவாள சக்கரவர்த்திகள், விச்சாதரரும் நாகருமென்பர், 'விண்பொரு நெடுங்குடைக் கொடித்தேரோரியர்' கஎரு.
ஓரை - மகளிர்விளையாட்டு, 'ஓரை யாயத் தொண்டொடி மகளிர்' கஎசு.
ஓவாது - ஒழியாது, 'ஓவாது கூஉம்' ச.

## க.

கங்கை - ஓராறு, 'மன்பதை யெல்லாஞ் சென்றுணக் கங்கைக், கரைபொரு மலிநீர் நிறைந்து தோன்றியாங்கு' கசுக.
கசடு - அழுக்கு, 'கசடீண்டு காட்சி' உகச.
கசிந்து - இனபுற்று, 'மூதிற் பெண்டிர் கசிந்தழ' ககூ.
கசிபு - இரங்கி, 'கசிபு கைதொழாஅ' உகு0.
கசிவு - இரக்கம், 'கண்பொறி போகிய கசிவோடு' கசுக; வியர்ப்பு, 'கசிவுற்றவென் பல்கிளையொடு' கசுசு; 'பசிதினத் திரங்கிய கசிவுடை யாக்கை' சசு0.
கஞல-நெருங்க, 'புதுமலர் கஞல' கசஎ.
கட்கும் - களையும், 'ஆம்பலொடு கட்கும்' சுக.
கட்சி - காடு, 'கட்சி மஞ்ஞையின்' சு0; சேக்கை, 'கட்சி காணுக் கடமா நல்லேறு' கருஎ; புகலிடம், 'கட்சி காணுக் கடமா நல்லேறு' உ0உ.
கடந்து - அழித்து, 'வெப்புடைய வரண்கடந்து' கக; எதிர்நின்றழித்து, 'ஓம்பாதுகடந்து' சு0; எதிர்நின்று,

'ஆலங் கானத் தமர்கடந்து' ௨௩; 'களமபுகு மல்லற் கடந்து' ௮௦; வஞ்சியாதெதிர்நின்று, 'கடந்தடு தானைச் சேர லாதனை' ௮.

கடம்பு - ஒருமரம், 'கார்நறுங் கடம்பின் பாசிலைத் தெரியல்' ௨௩.

கடவன் - கடப்பாடாகவுடையன், 'கடவன் பாரி கைவண் மையே' ௧௦௬.

கடறு - சுரம், 'இருங்கடறு வளைஇய குன்றம்' ௧௪௦; மலைச்சாரல், 'கடறு மணிகிளர' ௨௦௨.

கடன் - கிரியை, 'அந்தி யந்தண ரருங் கட னிறுக்கும்' ௨; தென்புல வாழ்நாக் கருங்கட னிறுக்கும்' ௯.

கடாம் - யானைமதம், 'கமழ்கடாத்து... ......யானை' ௩.

கடி-காவல், 'கடியுடை வியனகர்' ௯௫; விரைவு, 'எம்மம்பு கடிவிடுதும்' ௯; விளக்கம், 'அருங்கடிப் பெருங்காலை' ௧௬௬.

கடிந்து-போக்கி, 'கொடிதுகடிந்து' ௧௭.

கடிப்பு - முரசடிக்குங்குறுந்தடி, 'முரசுகடிப் பிகுப்பவும்' ௧௫௮.

கடுக்கும்-ஒக்கும், 'அவிரறல் கடுக்கும்' ௨௫.

கடுங்கண்ண - வன்கண்மையையுடைய, 'கடுங்கண்ண கொல்களிற்றால்' ௧௪.

கடுங்கள்-அழன்றகள், 'இன்கடுங் கள்ளி னாமூர்' ௮௦.

கடுப்ப - ஒப்ப, 'உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள்' ௯௦.

கடும்பகல் - விளங்கியபகற்பொழுது.

கடும்பசி - மிக்கபசி, 'கடும்பசி கலக்கிய விடும்பைகூர் நெஞ்சமொடு' ௨௬௦.

கடும்பு - சுற்றம், 'சேர்ந்தவர்கடும்பார்த்தும்' ௨௨; 'உடும்புரித்தன்னவென் பெழுமருங்கிற்கடும்பின்' ௬௮.

கடுமானகோதை - சேரமான்குட்டுவன்கோதை, 'கவிகைவண்மைக்கடுமான் கோதை' ௫௪.

கடுவளி - பெருங்காற்று, 'கடுவளிதொகுப்ப வீண்டிய' ௫௫.

கடைஇ - முடுகி, 'கூழுஞ்சோறுங் கடைஇ' ௧௬௦.

கடைஇய-செலுத்திய, 'களிறுகடைஇய தாள்' ௭.

கண் - அசைநிலை, 'மீன்கணற்று' ௧௦௯; கரும்பின்கண், 'ஆடுகட் கரும்பின் வெண்பூ' ௩௫.

கண்ட - மனத்தான் ஆராய்ந்தறியப்பட்ட, 'நீமெய்கண்ட தீமைகாணின்' ௧௦.

கண்டன்று - கண்டது, 'வாழக் கண்டன்று மிலமே' ௬௧.

கண்டிகும் - கண்டேம், 'மள்ளற்கண்டிகும்' ௨௫௧.

கண்டிசின் - கண்டேன், 'இனிது கண்டிசிற் பெரும' ௨௨.

கண்டீரக்கோன் - கண்டீரக்கோப்பெருநள்ளி, 'வண்புகழ்க் கண்டீரக்கோனாதலின்' ௧௫௧.

கண்டுயின்று - கண்மறைந்து, 'நூல்விரித்தன்ன கதுப்பினள் கண்டுயின்று' ௧௫௯.

கண்ணி - தலைமேற்சூடப்படுமாலை, 'கண்ணி கார்நறுங் கொன்றை' ௧; மாலை, 'மெல்லிணர்க்கண்ணி மிலைந்தமைந்தர்' ௨௪.

கண்ணுறை - மேலீடு, 'புதுநெல் வெண்சோற்றுக் கண்ணுறை யாக' ௬௧; மேலேதூவுவது, 'அடகின் கண்ணுறை யாக யாஞ்சில அரிசி வேண்டினே மாக' ௧௪௦.

கண்ணோடிய-இரங்கிய, 'கூறறுக் கண்ணோடிய வெருவரு பறந்தலை' ௧௯.

கணிச்சி - ஓர் ஆயுதம்; குந்தாலியென்றும் மழுவென்றுஞ்சொல்லுவர்; 'மருநதில் கணிச்சி வருந்த வட்டித்து' ௪௨; மழுவாயுதம், 'மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனும்' ௫௬; 'கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்' ௧௯௫.

கணை - அம்பு, 'எய்கணை கிழித்த பகட்டெழின் மார்பின்' ௧௩.

கதம் - சினம், 'கதநாய் வேட்டுவன்' ௩௩.

கதழும் - ஓடும், 'கடிய கதழு நெடுவரைப் படப்பை' ௨௦௨.

கதிர் - கிரணம், 'பகல்விளங் குதியாற் பல்கதிர் விரித்தே' ௮; சுடர், 'தண்கதிர் மதியம்,' 'ஒண்கதிர் ஞாயிறு' ௬.

கதூஉம் - கவரும், 'பூக்கதூஉ மினவாளை' ௧௮; 'சுடர்நிழற் கதூஉங் கடுமுரண் முதலை' ௩௭.

கந்தம் - தூணம், 'கலிகெழு கடவுள் கந்தங் கைவிட' ௫௨.

கந்தாரம் - மது, 'தெறிப்ப விளைந்த தீங் கந்தாரம்' ௨௫௮.

**கந்து** - கம்பம், 'கந்துமுனிந் துயிர்க்கும் யானை' கஎஅ; 'களிறு - கந்துசேர்பு நிலைஇ வழங்க' உஉ; தறி, 'நெடுநல் யானைக்குக் கந்தாற் றூவே' ருஎ; பற்றுக்கோடு, 'மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த நீள்கழன் மறவர்' கூகூ; 'நட்புக் கந்தாக' உகஎ.

**கபிலர்** - சங்கப்புலவருளொருவர்; இவர் அந்தணர்; 'புலனழுக் கற்ற வந்தணாளன், னிரந்துசென் மாக்கட் கினியிட னின்றிப், பரந்திசை நிற்கப் பாடினன்' கஉசு; 'பொய்யா நாவிற் கபிலன் பாடிய, மையணி நெடுவரை' கஎசு.

**கம்பலை** - ஆரவாரம், 'அழுவிளிக்கம்பலை' எ.

**கமழ** - பரக்க, 'வியலிடங் கமழ விவணிசை யுடையோர்க்கு' ருo.

**கயம்** - நீர்நிறைந்தபள்ளம், 'கயத்திட்ட வித்து' கூஎ.

**கரக்கினும்** - மறைக்கினும், 'தன்னுளடக்கிக் கரக்கினுங் கரக்கும்' க.

**கரகம்** - குண்டிகை, 'நீரற வறியாக் கரகத்து' க.

**கரப்பு** - மறைத்தல், 'கரப்பி லுள்ளமொடு' கூசு.

**கராம்** - முதலை, 'ஈர்ப்புடைக் கராஅத் தன்ன வெண்மை' கoசு; முதலையுள் ஒருசாதி, 'கராஅங் கலித்த குண்டுகண் ணகழி' கூஎ.

**கரிகால்வளவன்** - ஒருசோழன், 'களியியல் யானைக் கரிகால் வளவ' சுசு.

**கரு** - கருப்பம், 'மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்' கூசு; முட்டை, 'புறவுக் கருவன்ன புன்புல வரகு' கூசு.

**கரும்பனூர்** - ஓரூர், கூஅசு.

**கருமை** - வலிமை, 'கருங்கை யொள் வாட் பெரும்பெயர் வழுதி' கூ; 'கருங்கைக் கொல்லன்' உக.

**கருவி** - தொகுதி, 'கருவி வானம்' கருகூ.

**கருவூர்** - இது சேரர்களுடைய இராசதானிகளுளொன்று; இது வஞ்சியெனவும் வழங்கும், கக, ககூ, கூஉ, கூசு, எஅ, கசுஅ, உககூ.

**கலக்குற்றன்று** - கலக்கமுற்றது, 'பெருங்கலக் குற்றன்றால்' சக.

**கலப்பை** - மூட்டைகள்; யாழுமாம், 'காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை' உoசு.

**கலம்** - ஆபரணம், 'செய்வுறு நன்கலம்' சு; குப்பி, 'யவனர் - நன்கலந் தந்த தண்கமழ் தேறல்' ருசு.

**கலவம்** - மயிற்பீலி, 'கலவ மஞ்ஞை யிற் காண்வர வியலி' ககூ.

**கலாம்** - போர், 'புலாற்களஞ் செய்த கலாஅத் தானையன்' சுகூ.

**கலாவ** - கலக்க, 'தண்சிதர் கலாவப் பெய்யினும்' கoரு.

**கலி** - ஓசை, 'கலிகெழு கடவுள்' ருஉ; செருக்கு, 'வெள்ளுளைக் கலிமான்' கரு; 'கலிமான் வளவ' கூக, 'கதழ்பரிய கலிமாவும்' ருரு; தழைத்தல, 'கலிகொள் யாணர் வெண்ணணிப் பறந்தலை' சுசு.

**கலிச்சும்மை** - மிக்க ஆரவாரம், 'கலிச்சும்மை வியலாங்கண்' உஉ.

**கலித்த** - செருக்கிய, 'கராஅங் கலித்த' கூஎ; தழைத்த, 'தூவற் கலித்த தேம்பாய் புன்னை' உச; மிக்க, 'மானினங் கலித்த மலை' ககூஅ.

**கலுழ்ந்து** - கலங்கி, 'உண்கண்-கலுழ்ந்துவா ரரிப்பனி' கசச.

**கவ்வை** - எள்ளிளங்காய், 'கவ்வை கறுப்ப' கஉo.

**கவசம்** - மெய்புகு கருவி, 'புலிநிறக் கவசம்' கூ.

**கவர்பு** - கவர்ந்து, 'அந்தண் காவிரி வந்துகவர் பூட்ட' கூரு; கவர்ந்து, 'விளைவயல் கவர்பூட்டி' கசு.

**கவலை** - கவர்தவழி, 'துன்னருங் கவலை' கூ.

**கவான்** - மலைப்பக்கம், 'விறல்வரைக் கவான்' கருக.

**கவிகண்ணோக்கு** - கையாற்கவிக்கப்பட்ட கண்ணாற்குறித்துப்பார்க்கும்பார்வை, 'கவிகண ணோக்கின்......... ஆடவர்' கூ.

**கவிகுளம்பு** - கவிந்தகுளம்பு, 'வெள்ளுளைக்கலிமான் கவிகுளம் புகள' கரு.

**கவிகை** - இடக்கவிந்தகை, 'கவிகை வண்மைக் - கடுமான் கோதை' ருச.

**கவினிய** - அழகுபெற்ற, 'ஆசினி கவினிய பலவின்' கருஅ.

**கவினை** - ஒளியையுடையாய், 'செஞ்ஞாயிற்றுக் கவினை' ச.

கவுள் - கன்னம், 'களிறுகவு ளடுத்த வெ றிகல்' ௩௦.
கவைஇய-அகத்திட்ட, 'ஆரங் கவைஇய மார்பே' ௧௬.
கவைமுள் - வேலமுள், 'கவைமுள்ளிற் புழையடைப்பவும்' ௩அ.
கழங்கு - கழற்சிக்காய், 'மகளிர் - பொ லஞ்செய் கழங்கிற் றெற்றி யாடும்' ௩௯.
கழல் - ஒருகொடி, 'கழற்கனிவகுத்த' ௩௭; வீரகண்டை, 'தாள் - களங்கொ ளக் கழல்பறைந்தன' ௪.
கழனி - வயல், 'கழனி யுழவர்' ௧௩.
கழாத்தலை - கழாத்தலையாரென்னும் சங் கப்புலவர்; 'நம்போ லறிவி னுமரு ளொருவன், புகழ்ந்தசெய்யுட் கழாஅ த் தலையை, யிகழ்ந்ததன் பயனே' ௨௦௨.
கழால் - கழுவுதல், 'ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாலின்' ௯௪; கனை தல், 'கனைகால் கழாலின்' ௧௨௦.
கழி - காம்பு, 'தோல் கழியொடு பிடி செறிப்பவும்' ௯அ.
கழிப்பி - முடித்து, 'மூவேழ்துறையு முறையுளி கழிப்பி' ௧௫௨.
கழிய - இறப்ப, 'மாணிழை மகளிர் நா ணினர் கழிய' ௭அ.
கழியும் - இறக்கும், 'ஆடுநர் கழியுமிவ் வுலகத்து' ௨௯.
கழுமிய - கலந்த, 'ஆத்தரக் கழுமிய துகளன்' ௨௫அ.
கழுவாய் - போக்கும்வழி, 'வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென' ௩௪.
கழூஉ - கழுவி, 'கழூஉவிளங் காரம்' ௧௬.
களம் - போர்க்களம், 'ஈரைம் பதின்ம ரும் பொருதுகளத் தொழிய' ௨; யாகசாலை, 'யூப நட்ட வியன்களம் பலகொல்' ௧௫.
களரி - களர்நிலம், 'கள்ளி போகிய களரியம் பறந்தலை' ௨௨௫.
களிறு - ஆண்பன்றி, 'களிறுமேல் கொ ள்ளவும்' ௪௧; யானை, 'கொல்களி ற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற் றும்' ௯.
கறங்க - ஒலிப்ப, 'சிலைத்தார் முரசங் கறங்க' ௩௬.
கறி - மிளகுகொடி, 'கறிவள ரடுக்கத்து' ௧௬அ.
கறிக்கும் - தின்னும், 'மடப்பிணை...... வேளை வெண்பூக் கறிக்கும்' ௨௩.
கறூழ் - குதிரைமுகக்கருவி, 'மாவே,... கறூழ்பொருத செவ்வாயான்' ௪.
கறை - கறுப்பு, 'கறைமிட றணியலு மணிந்தன்று' ௧.
கறையடியானை - கறைபொருந்திய அ டியினையுடைய யானை, ௩அ, ௧௩௫.
கன்மார் - கற்பார், 'இளம்பல் கோசர் விளங்குபடை கன்மார்' ௧௬௯.
கனலி - சூரியன், 'அலங்குகதிர்க் கனலி நால்வயிற் றோன்றினும்' ௩௫; 'வெ ங்கதிர்க் கனலி துறறவும்' ௪௧.
கனை - மிகுதி, 'கனையெரி யுரறிய மரு ங்கும்' ௨௩.

## கா.

கா - சோலை, 'கடிமரந் துளங்கிய கா வும்' ௨௩; தோட்சுமை, ௪௦௩.
காணங்கு - காணபேன், 'காணங்கு வந்தி சிற் பெரும' ௧௭; எந்தைசிற் காண குவந் திசினே' ௧௨௫.
காணபு - காட்சி, 'கார்ப்பெய றலைஇய காண்பின காலை' ௧௧௬.
காப்பினை - காவலையுடையை, 'விறுப் புற வறியா வேமக் காப்பினை' ௨௦.
காப்பு - காவல், 'காப்புடைய வெழு முருக்கி' ௧௪.
காமர் - அழகு, 'காமர் - வண்ண மா ர்பு' ௧.
காய்தல் - விடாய்த்தல், 'காய்தலு முண் டக் கள்வெய் யோனே' ௨௫அ.
காய - காவிய = சுமந்த, 'சுவலழுந்தப் பலகாய' ௧௩௬.
காயம் - ஆகாயம், 'வறிதுநிலைஇய காய மும்' ௨௦, ௩௦.
கார் - கார்காலம், 'கண்ணி கார்நறுங் கொன்றை' ௧.
காரியாறு - ஓராறு, ௪௭.
காரெனுக்கல் - புல்லென்றசுற்றம் 'காரெ னொக்கற் கடும்பசி யிரவல' ௧௪௧.
காரை - ஒருசெடி, 'முட்காற் காரை முதுபழன்' ௨௫அ.
காலம் - முடிவு, 'ஞாலங் காக்குங் கால முன்பின்' ௫௭.
காலமுன்ப - காலன்போலும் வலியை யுடையோய், 'கால முன்பநிற் கண் டனென்' ௨௩.

காவல் - காக்கப்படுந்தேயம்; ஆகுபெயர், 'காவல் - குழவி கொள்பவரி னோம்புமதி' ரு.

காவலர் - காக்கும் அரசர், 'வையங் காவலர்' அ.

காவிரி - ஓருநதி, 'அந்தண் காவிரி வந்து கவர் பூட்ட' கூரு; 'மிக்குவரு மின்னீர்க் காவிரி' சஎ; 'நீயே தண்புனற் காவிரிக் கிழவனை' ருஅ; 'புனிறுதீர் குழவிக் கிலிற்றுமுலை போலச், சுரந்த காவிரி மரங்கொன் மலிநீர்' சுஅ; 'பொன்படு நெடுவரைப் புயலேறு சிலைப்பிற், பூவிரி புதுநீர்க் காவிரி புரக்குந், தண்புனற் படப்பை' கசுசு; 'கரைபொருது இரங்குபுனனெரிதரு மிகுபெருங் காவிரி, மல்லனன்னாட்டு' கஎச; 'கோடை யாயினுங் கோடி .... காவிரி புரக்கு நன்னாடு' கூகூகூ; 'முழங்குநீர்ப் படப்பைக் காவிரிக் கிழவன்' கூகூக.

காவிரிப்பூம்பட்டினம் - சோழநாட்டில் கடற்கரைக்கண் இருந்ததோர் பழையநகரம், நிஎ, ருஅ, கஎக, கூருகூ.

காழ் - கம்பம், 'வெளிறி னோன்காழ்ப் பணைநிலை முனைஇ' உகூ; காம்பு, 'கணைதிர ணோன்காழ் திருத்தி' கூரு; நாராசம், 'கயத்துவாழ் யாமை காழ் கோத் தன்ன' எ0; முத்துவடம், 'மார்பிற் பூண்ட வயங்குகா ழாரம்' கரு0; விதை, 'அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட - காழ்' உசுசு.

காழகம் - ஆடை, 'காழக நீப்பவும்' சக.

கான் - காடு, 'கானக நாடனை' ரு.

கானப்பேர் - காளையார்கோயில்; இது பல சிற்றரண்களையுடையதோர் பேரரண்; இதன்தலைவன் வேங்கைமார்பன்; இவனைவென்று இதனைக்கைக் கொண்டான் உக்கிரப் பெருவழுதி, 'அருங்குறும் புடுத்த கானப் பேரெயில், ......... வேங்கை மார்ப னிரங்க' உக; கூசுஎ.

கானல் - கடற்கரை, 'நிலவுமணல் வியன்கானல்' கவ; 'கானற் கழியுப்பு முகந்து' சு0.

## கி.

கிடப்பி - கிடத்தி, 'பசும்புற் பரப்பினர் கிடப்பி' கூகூ

கிடை - நெட்டி, 'அறுகய மருங்கிற் சிறுகோல் வெண்கிடை' எரு.

கிண்கிணி - சதங்கை, 'கிண்கிணி களைந்தகா லொண்கழ லொட்டு' எஎ.

கிணை - உடுக்கை, 'நுண்கோற் றகைத்த தெண்கண் மாக்கிணை' எ0; போர்ப்பறை, 'பாடின் றெண்கிணை கறங்க' எகு; தெண்கிணை கறங்கச்சென் றாண்டட் டனனே' எஅ.

கிணைமகள் - விறலி, 'கிணைமகட் கெளிதாற் பாடினள் வரினே' கககு.

கிணைமகன் - கிணையென்னும்பறையையுடையவன், 'இரும்பறைக் கிணைமகன்' கூஅஅ.

கிணைவன் - கிணைமகன், 'கொன்வரல் வாழ்க்கைநின் கிணைவன்' கூஎக.

கிழவோன் - உரித்தாந்தன்மையையுடையோன், 'விழுநீர் வேலி நாடுகிழவோனே' கூ.

கிழித்த - தின்ற, 'குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த வொக்கலொடு' கூச.

கிள்ளி - ஏறுதி திருக்கிள்ளி, 'கழல் புனை திருந்தடிக் கடுமான் கிள்ளி' ககூஎ. சோழன்.

கிள்ளிவளவன் - சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன், 'உருகெழு பசும்பூட் கிள்ளி வளவன்' சுக; 'கிள்ளி வளவ னல்லிசை யுள்ளி' எ0.

கிளை - இனம், 'கிளைபுகலத் தலைக்கூடியாங்கு' கஎ.

கிளைப்பின் - கிளறின், 'கேழ லுழுத விருஞ்சேறு கிளைப்பின்' கஎசு.

கிளையை - கிளைமையை யுடையோய், 'கிளையை மன்னெங் கேள்வெய் யோற்கென' கசுச.

## கீ.

கீழ்மடை - கடைமடை, 'அரிநர் கீழ்மடைக் கொண்ட வாளையும்' சஉ.

கீள்வது - உடைவது, 'சிறுகுளங் கீள்வது மாதோ' ககஅ.

## கு.

குச்சு - குச்சுப்புல், 'குச்சி னிரைத்த குரூஉமயிர் மோவாய்' உருஎ.

குட்டம் - ஆழம், 'இருமுந்நீர்க் குட்டமும்' உ0; 'நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து' உசுகூ.

குட்டுவன் - சோழியவேனாதி திருக்குட்டுவன், 'வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் குட்டுவன்' ௩௪௩.

குடக்கு - மேற்கு, 'வெண்டலைப் புணரிக் குடகடல்' ௨; 'குடாஅது தொன்றுமுதிர் பௌவத்துக் குடக்கும்' ௬.

குடகமலை - மேற்றிசையின்கண்ணதோர் மலை, 'குடாஅது பொன்படு நெடுவரை' ௧௬௬.

குடர் - நரம்பு, 'அரிக்குட ரரியின் யாமை மிளிர' ௨௪௯.

குடவாயில் - ஓரூர், ௭௪, ௨௪௨.

குடவர் - குடநாட்டார், 'வரையா வீகைக் குடவர் கோவே' ௧௭.

குடாது - மேற்கின்கண்ணது, 'குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின குடக்கும்' ௬.

குடிஞை - பேராந்தை, 'கடுந்திடி குடிஞையோ டிரட்டும்' ௧௭௦.

குடுமி - பாண்டியன் பல்யாகசாலைமுதுகுடுமிப்பெருவழுதி, 'குடுமிக் கோமாற் கண்டு நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே' ௬௪.

குடுமித்து - முடியையுடைத்து, 'கொண்ட குடுமித்தித் தண்பணை நாடே' ௩௨.

குடை - பனையோலையாற்செய்யப்படும் ஒருவகை உண்கலம், 'இரும்பனங் குடையின் மிசையும்' ௧௭௭.

குண்டு - ஆழம், 'குண்டுகழி' ௧௪; 'குண்டுசுனை' ௧௧௬.

குணக்கு - கிழக்கு.

குணாது - கிழக்கின்கண்ணது, 'குணாது கரைபொரு தொடுகடற் குணக்கும்' ௬.

குணில் - முரசடிக்கும் குறுந்தடி, 'குணில்பாய் முரசி னிரங்கு மருவி' ௧௪௩.

குதிரை - ஒருமலை, 'ஊரா தேந்திய குதிரைக் கூர்வேற், கூவிளங் கண்ணிக் கொடும்பூ ணெழினியும்' ௧௫௮; 'ஊராக் குதிரைக் கிழவ' ௧௬௮.

குப்பை - திரட்சி, 'குப்பை நெல்லின் முத்தூறு தந்த' ௨௪.

குமணன் - ஒருகொடையாளி, 'குன்றியுங் கொள்வல் கூர்வேற் குமண' ௧௫௯; 'நட்டோர் நட்ட நல்லிசைக் குமணன்' ௧௬௦; 'திருந்துவேற் குமணன்' ௧௬௩; 'நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண' ௧௬௪.

குமரி - கன்னியாறு, 'தெனாஅ துருகெழு குமரி' ௬; 'தென்குமரி' ௧௭; 'குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி' ௬௭.

குய் - தாளிப்பு, 'கமழ்குய் யடிசில்' ௧௦; 'சுவைக்கினி தாகிய குய்யுடையடிசில்' ௧௨௭.

குரம்பை - சிறியமனை, 'குறியிறைக் குரம்பை' ௧௨௯.

குரல் - எழுநரம்பில் முதற்றானம், 'குரல்புணர்சீர்க் கொளைவல்பாண் மகளும்' ௧௧; கதிர், 'மானணி பெருங்குர லனையன்' ௧௩௮; தோகை, 'பருஉக்குரற் சிறுதினை' ௧௬௮.

குரவை - குரவைக்கூத்து, 'சினமாந்தர் வெறிக்குரவை - யோத நீரிற் பெயர்பு பொங்க' ௨௨.

குரிசில் - தலைவன், 'பரிசிலர்க் கருங்கல நல்கவுங் குரிசில்' ௧௪.

குரீஇ - குருவி, 'குன்றத் திறுத்த குரீஇயினம்' ௧௯; 'தூக்கணங் குரீஇத் தூங்குகூ டேய்ப்ப' ௨௨௫.

குரும்பை - பனைநுங்கு, 'இரும்பனையின் குரும்பைநீரும்' ௨௪.

குரூஉ - கனம், 'பசுமட் குரூஉத்திரள் போல' ௩௨.

குலவு - வளைவு, 'குலவுச்சினைப் பூக்கொய்து' ௧௧.

குவவு - திரட்சி, 'ஓங்குமணற் குவவுத்தாழை' ௨௪.

குவளை - செங்கழுநீர், 'நீர்தரு மகளிர் குற்ற குவளையும்' ௪௨; 'குண்டுசுனைப் பூத்த குவளை' ௧௧௬. நீலம், 'தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை' ௧௦௫.

குவை - குவிவு, 'குவையிருங் கூந்தல்' ௨௫.

குவைஇய - திரண்ட, 'கூர்வேற் குவைஇய மொய்ம்பின்' ௧௧௮.

குழவி - குழந்தை, 'தாயி றூவாக் குழவி போல' ௪.

குழவிகொள்பவர் - குழந்தையை வளர்ப்போர், 'குழவி கொள்பவரி னோம்புமதி' ௫.

குழிசி - பானை, 'இருங்கட் குழிசி கவிழ்ந்திழுது மறப்ப' ௬௫.

குழீஇ - திரண்டு, 'கொண்மூ வேண்டுவயிற் குழீஇ' ௧௬௧.

குழை - தளிர், 'பொலங்குழை யுழிஞை' ௫௦.

குழைப்ப - தளிர்ப்ப, 'முளிபுற் கானங் குழைப்ப' கரு0.
குளவி - மலைமல்லிகை, 'அடைமல்கு குளவி' கூ0; 'கூதளங் கவினிய குளவி முன்றில்' ககூஅ.
குளிப்ப - மேல்விழுந்து உள்புக, 'கடற்படை குளிப்ப மண்டி' கூ.
குற்ற - பறித்த, 'குற்ற குவளை' சஉ.
குற்றுதல் - குறுதல், 'குற்ருஉ வுலக்கை' உஉ.
குறித்து - கருதி, 'நீரழுவ நிவப்புக் குறித்து' கச.
குறியெதிர்ப்பை - குறித்த எதிர்ப்பை, 'நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி' ககூரு.
குறுகி - அணுகி, 'இடையின்று குறுகி' ருச.
குறுங்கோழியூர் - ஒரூர், கஎ, உ0, உஉ.
குறுநணி - அணிமை, 'நம்முட் - குறுநணி காண்குவ தாக' உ0கூ.
குறும்பறை - பேடை, 'உயர்நிலை மாடத்துக் குறும்பறை யசைஇ' கூஎ.
குறும்பு - அரண், 'குறும்பல் குறும்பிற் றதும்பவைகி' கஎஎ; குறும்பர், 'குறும்படைந்த வரண்கடந்தவர்' கூஎ. சிற்றரண, 'குரூஉக்களிற்றுக் குறும்புடைத்தலின்' கூஎ.
குறுமகள் - மனைவி, 'மெல்லியற் குறுமக ளுள்ளிச் செல்வல்' கககூ.
குறுமாக்கள் - சிறுபிள்ளைகள், 'ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாலின்' கூச.
குறை - முடிக்கப்படும்பொருள், 'பயக்குறை யில்லைத்தாம் வாழு நாளே' கஅஅ.
குன்றினும் - குறையினும், 'மாரிபொய்ப்பினும் வாரி குன்றினும்' ககூரு.
குன்று - சிறுமலை, 'குன்றுமலை காடுநாடு' கஎ; 'குன்றுதூ வெறியு மரவம் போல' உகக; பக்கமலை, 'அம்மலை காக்கு மணிநெடுங் குன்றின்' கரு0.
குன்றூர் - ஒரூர், கூகூஅ.

கூ.

கூஉம் - கூப்பிடும், 'ஓவாது கூஉநின் னுடற்றியோர் நாடே' ச; கூவும், 'சேவல்...... ஏனல் காப்போ ருணர்த்திய கூஉம்' உஅ.
கூகை - கோட்டான், 'வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடி' உகூஅ.
கூடல் - மதுரை, 'தமிழ்கெழு கூடற் றண்கோல் வேந்தே' ருஅ.
கூடலூர் - ஒரூர், உஉகூ.
கூடு - நெற்கூடு, 'கூடு வியனகர்' கசஅ.
கூதளம் - கூதாளி, 'கூதளங் கவினிய குளவி முன்றில்' ககூஅ.
கூம்பு - பாய்மரம், 'கூம்பொடு மிசைப் பாய் களையாது' கூ0.
கூர் - மிகுதி, 'கூரி லாண்மை' எரு.
கூழ் - சோறு, 'கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்' எ0; பொருள், 'எத்திஙர் தருஉங் கூழே' கஉஉ.
கூழை - பின்படை, 'கூழைதார் கொண்டு' அஅ; மயிர், 'கொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர்' கூக.
கூளியர் - ஆறலைகள்வர், 'குரங்கன்ன புன் குறுங்கூளியர்' ககூகூ; மறவர், 'கூர்நல் லம்பிற் கொடுவிற் கூளியர்' உகூ.
கூற்றம் - நாட்டின் ஒருபாகம், உச; யமன், 'மருந்தில்கூற்றத்து' கூ.
கூற்று - யமன், 'உயிருண்ணுங் கூற்றுப் போன்றன' ச.

கெ.

கெடிறு - ஒருவகைமீன், 'குரூஉக் கெடிற்ற குண்டகழி' கஅ.
கெடுவின்று - கெடுதலில்லாமல், 'கெடுவின்று.........அறநின்று நிலையிற்று' கூக.

கே.

கேட்டிசின் - கேட்டேன், 'பிறர்பிறர் கூற வழிக்கேட் டிசினே' கரு0.
கேட்பல் - கேட்பேன், 'கேட்ப லெந்தே' உஎ.
கேழ் - நிறம், 'சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ் - நூற்றித ழலரின்' உஎ,
கேளலம் - கேட்டறியோம், 'இன்றினூங்கோ கேளலம்' எகூ.
கேளிர் - சுற்றத்தார், 'வன்புலக் கேளிர்க்கு வருவிருந் தமரும்' சஉ.
கை - கோடாலியின்கை, 'நெடுங்கை நவியம்' கூகூ; செயல், 'மையன் மாலையாங் கையறு பிணைய' கூஎ.
கைம்முற்றல - முடியா, 'கைம்முற் றல நின் புகழே' ருகூ.
கைம்மை - கைம்மைநோன்பு, 'ஒண்ணுதன் மகளிர் கைம்மை கூர' உரு.

கையறவு - மிடிமை, 'பிறர்கை யறவு தாஞ் ஞுதலும்' ௧௫௭.

கைவழி - யாழ், எப்பொழுதும் கைய கத்திருத்தலால் இப்பெயர்பெற்றது; 'கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி' ௧௪௯.

## கொ.

கொட்கும் - சூழவரும், 'காலுணவாகச் சுடரொடு கொட்கும்' ௪௬.

கொடி - ஒழுங்கு, 'ஆய் கரும்பின் கொடிக்கூரை' ௨௨; 'மீன்சுடு புகையின் புலவுநாறு நெடுங்கொடி' ௫௨; துவசம், 'கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்' ௯.

கொடிஞ்சி - தேர்மொட்டு, 'நெடுந்தேர்க் கொடிஞ்சி பொலிய நின்றோன்' ௭௭.

கொடிது - தீத்தொழில், 'கொடிது கடிந்து கோறிருத்தி' ௧௭.

கொடுத்தோய் - வழங்கினோய், 'பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்' ௨.

கொடுமை - வளைவு, 'கொடுவிற் கூளியர்' ௨௩; 'கொடுங்கரைத் தெண்ணீர்ச் சிறுகுளம்' ௧௧௮.

கொடுவரி - புலி, பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை, ஆகுபெயருமாம், 'கொடுவரி வழங்குங் கோடுயர் நெடுவரை' ௧௩௫.

கொண்கானம் - ஒருமலை, ௧௫௪, ௧௫௫, ௧௫௬.

கொண்டல் - கீழ்காற்று, 'கொண்டன் மாமழை' ௩௪.

கொண்டி - கொள்ளை, 'கொண்டியும் பெரிதென' ௭௮; 'தண்டமிழ் வரைப்பகங் கொண்டி யாக' ௧௬௮; திறை, 'கொண்டி வேண்டுவ னாயிற் கொள்கென' ௫௧.

கொண்பெருங் கானத்துக் கிழவன் - கொண்கானங்கிழான், ௧௫௬.

கொண்பெருங்கானம் - கொண்கானமென்னுமலை, 'தண்பல விழிதரு மருவிச், கொண்பெருங் கானம் பாடலெனக் கெளிதே' ௧௫௪; 'விளங்குபுகழ்க் கொண்பெருங் கானத்துக் கிழவன்' ௧௫௫; 'இரண்டுகன் குடைத்தே கொண்பெருங் கானம்' ௧௫௬.

கொண்மார் - கொள்ளல்வேண்டி, 'ஒன்படைக் கடுந்தார் முன்புதலைக் கொண்மார்' ௧௬.

கொண்மென - கொண்மினெனச்சொல்லி, 'கொண்மெனச் - சாத்திடை நல்கி யோனே' ௧௫௨.

கொய்து - பறித்து, 'குலவுச்சினைப் பூக் கொய்து' ௧௧.

கொல்லாது - கெடுக்காமல், 'பிறரெனக் குணங்கொல்லாது' ௫௫.

கொல்லி - ஒருமலை, 'ஒங்கு கொல்லியோ ரடுபொருந' ௨௨; 'ஓங்கிருங் கொல்லிப் பொருநனை' ௧௫௨; 'பிறங்குமிசைக் கொல்லி யாண்ட வல்வில்லோரியும்' ௧௫௮.

கொலைவன் - கொல்லுதலைச்செய்பவன், 'கொலைவன் யார்கொலோ' ௧௫௨.

கொழுநன் - தலைவன்.

கொழுமீன் - கொழுவியமீன், 'கழனியுழவர் சூட்டொடு தொகுக்குங் - கொழுமீன்' ௧௩.

கொள்கை - விரதம், 'ஆன்ற கேள்வி யடங்கிய கொள்கை' ௨௬.

கொள்ளார் - பகைவர், 'கொள்ளாரோட்டிய நள்ளியும்' ௧௫௮.

கொளீஇ - கொளுத்தி, 'பூநாற்றத்த புகைகொளீஇ' ௧௪; ஒங்குமலைப் பெருவிற் பாம்பு ஞாண் கொளீஇ' ௫௫; பெய்து, 'புனற்குருதி யுலைக் கொளீஇ' ௨௬.

கொளை - பாட்டு, 'கொளைவல்பாண் மகனும்' ௧௧.

கொற்றம் - வெற்றி, 'பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே' ௨௧.

கொற்றன் - பிட்டங்கொற்றன், 'வைவள் ளீகைக் கடுமான் கொற்ற' ௧௬௮; 'திருந்துவேற் கொற்றன்' ௧௭௧.

கொன்றோர் - சிதைத்தோர், 'ஒருவன் - செய்தி கொன்றோர்க்கு' ௩௪.

## கோ.

கோ - அரசன், 'ஆற்றலெங்கோ' ௨௨.

கோடாது - வளையாமல், 'நமரெனக் கோல்கோடாது' ௫௫.

கோடியர் - கூத்தர், 'விழவிற் கோடியர் நீர்மை போல' ௨௯.

கோடு - கொம்பு, 'நுதிமழுங்கிய வெண் கோட்டான்' ௪. சிகரம், 'பேயாற் கோட் டிமயமும்' ௨., பக்கம்,' கோ

டுதிரன் கொண்மூ' ௬௫. புடை, 'கோடிய ரடிப்பு' ௧௬௪. யாழின் ஒருறுப்பு, 'கருங்கோட்டுச் சீறியாழ்' ௧௨௯ ; ௧௪௫.

கோடை - கடிய நெடுவேட்டுவன்மலை, 'வெள்வீ வேலிக் கோடைப் பொரு ந' ௨௦௫.

கோதை - சேரமான் கோக்கோதை மார்பன், 'கோதை மார்பிற் கோதை யானும்' ௪௮ ; 'யாங்கன மொழிகோ வோங்குவாட் கோதையை' ௪௯. சேரன், 'மாவள் வீகைக் கோதையு ம்' ௧௭௨. மாலை, 'கோதை மார்பிற் கோதை யானும்' ௪௮.

கோயில் - அரண்மனை, ௬௪.

கோல் - கோற்றொழில், 'வார்கோல் ......குறுந்தொடி மகளிர்' ௬௪.

கோவல் - கோவலூர்.

கோவலூர் - இது பெண்ணையாற்றின் கரையின் கண்ணதோர் நகரம் ; இத ன் தலைவர் மலையமான் திருமுக்காரி முதலியோர், இஃது ஒரு காலத்து அதியமான் நெடுமானஞ்சியால் வெ ல்லப்பட்டது ; கோவலெனவும் வழ ங்கும், 'முரண்மிகு கோவலூர் நூறி நின், அரணடு திகிரி யேந்திய தோ ளே' ௯௯.

கோவூர் - ஓரூர், ௬௧.

கோழி - உறையூர், 'கோழி - யுயர்நிலை மாடத்து' ௬௯ ; கோழி யோனே கோப்பெருஞ் சோழன்' ௨௧௨.

கோள் - குலை, 'செழுங்கோள் வாழை' ௧௬௮.

கோளி - பூவாது காய்க்கு மரம், 'முழு முத றொலைந்த கோளி யாலத்து' ௫௮.

கோனாடு - இது சோழநாட்டின் உள் நாடுகளுளொன்று, ௫௪.

## கௌ.

கௌரியர்-பாண்டியர், 'தவிரா வீகைக் கௌரியர் மருக' ௩.

## சா.

சாஅய் - மெலிந்து, 'நல்கா மையி னைவ ரச் சாஅய்' ௧௪௬.

சாகாடு - உருள், 'அச்சுடைச் சாகாட் டாரம்' ௨௫௬. சகடம்-வண்டி, 'ஆ ரைச் சாகாட் டாழ்ச்சி போக்கும்' ௯௦ ; 'பகடடச் சாகாட் டாழ்ச்சி சொலிய' ௬௦ ; 'காவற் சாகா டுகை ப்போன்' ௧௮௫; 'அச்சுடைச் சாகா ட் டாரம் பொருந்திய - சிறுவெண் பல்லி' ௨௫௬.

சாத்தன் - ஒலையூர்கிழார்மகன் பெருஞ் சாத்தன், 'வல்வேற சாத்தன் மாய்ந்த பின்றை, முல்லையும் பூத்தியோவவ ஞெல்லையூர் நாட்டே' ௨௪௨; பாண டியன் கீரஞ்சாத்தன், 'உண்மென விரக்கும் பெரும்பெயாச் சாத்தன்' ௧௭௮.

சாந்து - சந்தனம், 'பொலங்கழற்காற் புலர்சாந்தின்' ௩.

சாபம் - வில், 'சாப நோன்ஞாண்' ௧௪, 'குறுந்தொடி கழித்தகைச் சாபம பற்றி' ௭௦.

சாயலர் - இளப்பையுடையா, 'உழை யோர் தன்னினும் பெருஞ்சா யல ரே' ௨௬௨.

சாயா - இளையாத, 'மருந்தில் கூற்றத் தருந்தொழில் சாயா' ௩.

சாயின்று - சாய்ந்தது, 'சாயின் றென்ப வாஅய் கோயில்' ௧௨௭.

சாரவு - புகலிடம், 'உறுநர் செலசார் வாகி' ௨௦௫.

சாறு - விழா, 'சாறுகொண்ட களம் போல' ௨௨ ; 'சாறுதலைக கொண்ட டென' ௮௨.

சான்ற - அமைந்த, 'பாடல் சான்ற வி றல்வேந்தனும்' ௧௧.

சான்றோ-நற்குணங்களாலமைந்தோர், 'சான்றோர் செய்த நன்றுண் டா யின்' ௩௪.

## சி.

சிதடன் - குருடன், 'துஞ்சுபுலி யிட றிய சிதடன் போல' ௭௩.

சிதடு - குருடு ; இஃது எண்வகையெச் சத்துள் ஒன்று, 'சிறப்பில் சிதடு முறு ப்பில் பிண்டமும்' ௨௮.

சிதர் - துளி, 'தண்சிதர் கலாவப் பெய் யினும்' ௧௦௫.

சிதலை - கறையான், 'நுண்பல் சிதலை யரிதுமுயன் றெடுத்த - செம்புற்று' ௫௧.

சிதார் - சீரை, 'வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர்' ௬௯ ; கூருகிர்ப் பருந்தி னிருஞ்சிற கன்ன - பாறிய சிதாரேன்' ௧௫௦.

சிதைய - அற, 'புலிநிறக் கவசம் பூம் பொறி சிதைய' ௧௬; சிதற, 'தண் ணுன் பொருகை வெண்மணற் சி தைய' ௩௬.
சிமை - மலையுச்சி, 'ஆடுகழை நரலுஞ் சேட்சிமை' ௧௨௦.
சிலம்பு - மலை, 'குணில்பாய் முரசி னிர ங்கு மருவி-நளியிருஞ் சிலம்பு' ௧௪௬.
சிலை - வில, 'சிலைத்தா ரகலம்' ௬௧.
சிலைக்கும் - கொட்டும், 'வலிதுரந்து சிலைக்கும் வன்கட் கடுந்துடி' ௧௭௦.
சிலைத்து - ஒலித்து, 'சிலைத்தெழுந்து' எஅ.
சிவந்து - கோபித்து, 'கதவெறியாச் சிவ ந்துராஅய்' ௪.
சிற்றாயம் - அணையமென்னும் நகரத் தின் ஒருபாகம், ௨௦௨.
சிறந்த - மிகுந்த, 'சிறந்த சீர்கெழுகொ டியும்' ௧; 'சிறந்த - நான்மறை முனி வர்' ௬.
சிறந்தன்று - கனத்தது, 'சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே' ௭௫.
சிறப்பு - செல்வம், 'தகைப்பெருஞ் சிற ப்பிற் குடிமிக் கோமான்' ௬௪; தலை மை, 'வீயாச் சிறப்பின் வேள்வி மு ற்றி' ௧௫; 'உரைசால் சிறப்பிற் புக ழ்சான் மாற' ௫௭; 'உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்' ௭௨.
சிறுகுடி - பண்ணனூர், 'கைவள் ளீ கைப் பண்ணன் சிறுகுடி' ௭௦.
சிறுபதம் - தண்ணீர், 'கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்' ௭௪.
சிறுபேராளர் - சிறியபெரிய ஆண்மை யையுடையோர், 'நெடுமொழி மறந்த சிறுபே ராளர்' ௧௭அ.
சிறை - அரண், 'நீர்மிகிற் சிறையு மில் லை' ௫௧; காவல், 'வீங்குசிறை விய லருப்பம்' ௧௭; சிறகு, 'இருந்துசி றை வளைவயப் பருந்து' ௬.
சினவின் - கொதித்தெழுமாயின், 'இரு ஞு முண்டோ ஞாயிறு சினவின்' ௬௦.
சினை - மரக்கிளை, 'குலவுச்சினைப் பூக் கொய்து' ௧௧.
சினைஇ - கோபித்து, 'அலங்குளைப் புர வி யைவரொடு சினைஇ' ௨; 'மடங்க லிற் சினைஇ' ௭௧.
சினைஇயோர் - சினப்பித்தோர், 'வளவ நிற் சினைஇயோர் நாடே' ௪௧.

## சீ.

சீக்கும் - தாக்கும், 'மந்தி சீக்கு மணங் குடை முன்றில்' ௨௪௭.
சீர் - அளவு, 'விரிசீர்த் - தெரிகோல்' ௬. தலைமை, 'விழுச்சீர் - ஓடாப் பூ ட்கை' ௧௨௬; 'தண்குரவைச் சீர்தூ ங்குந்து' ௨௪. தாளம், 'பறைச்சீர் தூங்க' ௬௨. நன்மை, 'சீருடைய விழைபெற் றிசினே' ௧௧. பெருமை, 'சீர்கெழு கொடியு மவ்வே றென்ப' ௧.
சீர்த்தி - மிகுபுகழ், 'அருஞ்சீர்த்திப் பெ ருங்கணுறை' ௧௫.
சீறை - துலாம், 'சீறை புக்க வரையா வீகை யுரவோன்' ௪௬.

## சு.

சுட்டின் - குறிப்பின், 'தொன்னிலக் கிழமை சுட்டின்' ௩௨.
சுடர் - ஒளி, 'தெறுசுடர் ஒண்கதிர் ஞாயிறு' ௬. சூரியன், 'சுடர் சுட்ட சுரத்தேறி' ௧௩௬.
சும்மை - ஆரவாரம், 'கலிச்சும்மை விய லாங்கண்' ௨௨.
சுரம் - அரியவழி, 'கொடிய வெண்ணுத சுரம்பல கடந்து' ௪௭.
சுருக்கி - கட்டி, 'நல்யா ழாகுளி பத லையொடு சுருக்கி' ௬௪.
சுருக்கினெம் - கட்டினேம், 'சுருக்கி னெங் கலப்பை' ௨௦௬.
சுவல் - தோள், 'சுவலழுந்தப் பலகாய' ௧௩௧; 'சுவற்பூண் ஞாண்மிசைப் பொலிய' ௧௬௩. மேட்டுநிலம், 'வே ங்கைச் செஞ்சுவல்' ௧௨௦.
சுவைக்க - உண்ண, 'சுவைக்கினி தா கிய குய்யுடை யடிசில்' ௧௨௭.
சுற்றம் - கிளைகள், 'நகைப்புற ஞகின் சுற்றம்' ௨௯.
சுறவு - ஒருமீன், 'சுறவினத் தன்ன வா ளோர்' ௧௩.

## சூ.

சூட்டிய - நடாத்திய, 'நீரக விருக்கை யாழி சூட்டிய' ௩௩. பரப்பிய, 'நில வரை சூட்டிய நீணெடுந் தானை' ௨௨அ.
சூடு - சூட்டிறைச்சி, 'குறுமுயற் கொ ழுஞ்சூடு' ௩௪. நெற்சூடு, 'பீலி - கழனி யுழவர் சூட்டொடு தொகுக் கும்' ௧௩.

சூர் - சூரபன்மா, 'சூர்மலைவை முருகன்' உரு.

சூர்ப்பு - வளைந்தகடகம், 'சுடர்விடு பசு ம்பூட் சூர்ப்பமை முன்கை' கஶரு.

சூல் - கருப்பம், இளம்பிடி யொருசூற் பத்தி னும்மோ' கரு0.

சூழ்ச்சி - உசாவுதல், 'போற்றார்ப் பொ றுத்தலுஞ் சூழ்ச்சிய தகலமும்' உ.

## செ.

செக்கர் - செந்நிறம், 'செல்சுடர் ஞாயி ற்றுச் செக்கரிற் றோன்ற' கசு.

செங்கோலை - செங்கோலையுடையை, 'அறந்துஞ்சுஞ் செங்கோலையே' உ0.

செத்து - அறிந்து, 'முழவின் - பாடின் றெண்கண் கனிசெத்து' கஉஅ.

செதுக்கண் - ஒளிமழுங்கினகண், 'புது க்கண் மாக்கள் செதுக்க ணார' உசுக.

செந்தில் - திருச்செந்தூர், 'வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில், நெடுவே ணிலைஇய காமர் வியன்றுறை' டு.

செம்பியன் - சோழன், 'சினங்கெழு தானைச் செம்பியன் மருக' ருஎ.

செம்பியர் - சோழர், 'சேண்விள... சிறப்பிற் செம்பியர் மருகன்' உஉஅ.

செம்மல் - தலைமை, 'தம்மைப் பிழைத் தோர்ப் பொறுக்குஞ் செம்மல்' சரு; நும்மோ ரன்ன செம்மலு முடைத் தே' சஎ.

செம்மலை - தலைமையையுடையாய், 'எம க்கும் பிறர்க்குஞ் செம்மலை யாகலின்' கசுசு.

செம்மற்று-தலைமையையுடையது, 'செ ம்மற் றம்மநின் வெம்முனை யிருக்கை' ருரு.

செம்மீன் - அங்காரகன்; திருவாதிரையு மாம்; 'செம்மீ னிமைக்கு மாக விசு ம்பின்' சு0.

செம்மை - நேர்மை, 'செந்தொடை பிழையா வன்க ணாடவர்' ரு.

செய் - செய்கை, 'பெருஞ்செய் யாட வர்' ககரு.

செய்தி - செய்கை, 'குடிப்பொரு ளன் றுநுஞ் செய்தி' சடு. செய்ந்நன்றி, 'செய்தி கொன்றோர்க் குய்தி யில் லென' ருச. செய்வை, 'இனிய செ ய்திநின் னார்வலர் முகத்தே' கஉ.

செய்திமோ - செய்வாயாக, 'அறஞ்செய் திமோ வருள்வெய் யோய்' கசடு.

செய்ம்மே - செய்வாயாக, 'வேட்டது செய்ம்மே' சசு.

செயற்கை - தொழில்; 'இயற்கை யல் லன செயற்கையிற் றோன்றினும்'

செயிர் - குற்றம், 'செயிர்தீர் கற்பிற் சேயிழை' ரு.

செயிர்த்தன்று - வெகுண்டது, 'செற் றன் றாயினுஞ் செயிர்த்தன் றாயினும்' உஉசு.

செரீஇ - செருகி, 'மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇ' உஉ.

செரு - சண்டை, 'செருமிகு சேஎய்' கச.

செருக்கிய - களித்த, 'நிணந்தின்று செ ருக்கிய நெருப்புத்தலை நெடுவேல்' உ00.

செல்ல - பரக்க, 'உரைசெல முரசு வௌவி' உசு.

செல்லாமோ - போவேமல்லேமோ, 'செல்லா மோதில் சில்வளை விறலி' சுச.

செல்வக்கடுங்கோவாழியாதன் - சேர மான்சிக்கற்பள்ளித்துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன், 'செருமிகு நோன்றாட் செல்வக் கடுங்கோ, வாழி யாத னென்றுத் தெவ்வர்' ருஅஎ.

செல்வை - செல்வமுடையாய், 'செல் வை யாயிற் செலவை யாகுவை' எ0.

செலவு - செல்லுதல், 'வீங்குசெலல் மண்டிலம்' அ

செலவு - வீதி, 'செஞ்ஞா யிற்றுச் செல வும்' ரு0.

செலியர் - தணிக, 'செலிய ரத்தைநின் வெகுளி' சு.

செலீயர் - போவதாக, 'படாஅச் செலீ யர்நின் பகைவர் நாளே' உச.

செவ்வழி - இரங்கற்பண், 'சிறியாழ் செவ்வழி பண்ணி' கசச, கசஎ. மா லைப்பண், 'கைவழி மருங்கிற் செவ் வழி பண்ணி' கசரு.

செவ்வானம் - செக்கர்வானம்; 'செவ் வா னத்து வனப்புப் போன்றன' ச.

செவ்வியோர் - நடுவுநிலைமையையுடை யோர், 'செவ்வியோர்க் களித்தலும்' உக.

செவிசெஞ்சேவல் - கழுகின் சேவல், 'கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த செவிசெஞ் சேவலும்' உருஅ.

செழியன் - பாண்டியன்; 'வென்வேற் செழிய' ௧௯; 'சிதைதலுய்ந் தன்றோ நின்வேற் செழிய' ௨௫.

செற்றன்று - கறுவுகொண்டது, 'செற் றன் றாயினுஞ் செயிர்த்தன் றாயினும்' ௨௨௬.

செற்றும - சென்றுசெறியும், 'ஆழற் புறத் தும்பிற் செற்றும்' ௧௫௨.

செறல் - வெகுட்சி, 'செறனோக்கின் ......களிறு' ௧௫.

செறிவினை - அடக்கத்தையுடையாய், 'அறிவறி வாகாச் செறிவினை யாகி' ௩௦.

செறு - வயல், 'மலங்குமிளிர் செறுவில்' ௬௧; 'நூறுசெறு வாயினும்' ௧௮௪.

செறுக்கும் - அடைக்கும், 'மீனிற் செறுக்கும்' ௭.

செறுத்த - அடக்கிய, 'செறுத்த செய்யுள்' ௫௩.

செறுவர் - பகைவர், 'செறுவர் நோக்கிய கண்' ௧௦௦.

சென்மே - செல்வாயாக, 'தேர்வே ளாயைக் காணிய சென்மே' ௧௩௩.

சென்னி - சோழன், ௨௦௩. தலை, 'இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த நான்மறை முனிவ ரேந்துகை யெதிரே' ௬.

## சே.

சேக்கும் - உறங்கும், 'கயலார் நாரை போரிற் சேக்கும்' ௨௪; 'பொய்கை நாரை போரிற் சேக்கும்' ௨௦௯.

சேக்கை - கட்டில், 'நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை' ௫௦.

சேண் - நெடுந்தூரம், 'சேண்விளங் கும் புகழ்' ௧௦; 'சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு' ௧௭௪. நெடுநாள், 'திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி' ௨.

சேட்சென்னி - சோழன் நலங்கிள்ளியின்பெயர், 'சேட்சென்னி நலங்கிள்ளி' ௨௭; 'சேட்சென்னி நலங்கிள்ளி கேட்குவன் கொல்லென' ௨௨௫.

சேப்ப - தங்க, 'கான மஞ்ஞை கணனொடு சேப்ப' ௧௨௭.

சேய்-முருகக்கடவுள், 'செருமிகுசேஎய்' ௧௪.

சேர்ப்பன் - நெய்தனிலமுடையவன், 'பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்பனென்கோ' ௪௯.

சேர்ப்பு-கடற்கரை, 'பிறங்குநீர்ச் சேர்ப்பினும் புள்ளொருங் கெழுமே' ௪௯.

சேர்பு - பொருந்தி, 'மழகளிறு கந்துசேர்பு நிலைஇவழங்க' ௨௨.

சேர்மின் - அடையும், 'நும்மரண்சேர்மின்' ௯.

சேறு - செறிவு, 'தலையோர் நுங்கின் றீஞ்சேறு மிசைய' ௨௨௫.

சேறும் - செல்லுதும், 'சேறும் வாழியோ பெரும்பெயர்ப் பறம்பே' ௧௧௩.

## சொ.

சொலிய - களையவேண்டி, 'புறவி னல்லல் சொலிய' ௩௯; 'பண்டைச் சாகாட் டாழ்ச்சி சொலிய' ௯௦

சொன்றி - சோறு, 'புண்புல வரகின் சொன்றியொடு பெறூஉம்' ௧௯௭.

## சோ.

சோரும் - வடியும், 'அயறுசோரு மிருஞ் சென்னிய' ௨௨.

## ஞ.

ஞமலி-நாய், 'தொடர்ப்படு ஞமலியின்' ௭௪.

ஞமன் - சமன், யமன், 'தெரிகோன் ஞமன்ன்போல' ௬.

## ஞா.

ஞாண் - நாண், 'சாப நோன்ஞாண்' ௧௪; 'ஒங்குமலைப் பெருவிற் பாம்பு ஞாண் கொளீஇ' ௫௫.

ஞாயில் - மதிற்சூட்டு, 'மீன்பூத் தன்ன வுருவ ஞாயில்' ௨௧.

ஞாயிறு - சூரியன், 'நின்கடற் பிறந்த ஞாயிறு' ௨; 'செஞ்ஞா யிற்றுக் கவினை' ௪; 'ஒண்கதிர், ஞாயிறு' ௬,

ஞான்ற - வீழ்ந்த, 'பட்ட மாரி ஞான்ற ஞாயிற்று' ௮௨.

ஞிமிறு - தேனீ, 'வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாம்' ௯௩.

## ஞெ.

ஞெமல-பரக்க, 'வரிமணன் ஞெமல' ௯௦.

ஞெலிதல் - கடைதல், 'தான்ஞெலி தீயின் விளாவினன் சுட்டு' ௧௫௦.

ஞெலிதீ - கடைந்துகொள்ளப்பட்டதீ, 'கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து' ௨௪௭.

ஞெள்ளல் - தெரு, 'கடுந்தேர் குழித்த ஞெள்ளல்' ௧௫.

## த.

தகடு - புறவிதழ், 'மாத்தகட் டொள்வீ தாய துறுகல்' ௨௦௨.

தகடூர் - ஓரூர், ௫௦.

தகரம் - ஒருமரம், 'தகரத் தண்ணிழற் பிணையொடு வதியும்' ௧௯௨.

தகவு - தகுதி, 'காணுத்தக வுடைத்தே' ௩௬.

தகுதி - தக்கசெய்கை, 'தகுதி கேளினி மிகுதி யாள' ௧௮.

தகை - அழகு, 'தகைமாண் வழுதி' ௫௯. கூறுபாடு, 'வான்றுடைக்குந் தகைய போல' ௩௮. தகுதி, 'தகைமாண் குடுமி' ௬.

தகைத்த - கட்டப்பட்ட, 'நுண்கோற் றகைத்த தெண்கண் மாக்கிணை' ௭௦.

தகைத்தல் - சுற்றுதல், 'தகைத்தார்' ௬௯.

தங்கால் - திருத்தங்காலென்னுமோரூர், ௩௨௬.

தசும்பு - குடம், 'துணைபுண ராயமொடு தசும்புடன் றொலைச்சி' ௨௨௪. மிடா, 'தயிர்கொடு வந்த தசும்பு' ௩௩.

தஞ்சம் - எளியது, 'முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்' ௭௩. எளியேன், 'யானோ தஞ்சம்' ௩௪.

தட்கும் - தளையாநிற்கும், 'ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே' ௧௯௩.

தட்டை - கிளிகடிகருவி, 'புனவர் தட்டை புடைப்பின்' ௪௯.

தட்டோர் - தடைப்படச்செய்தோர், 'தட்டோ ரம்ம விவட்டட் டோரே' [தன்-பகுதி]. ௧௮.

தட்ப - தடுப்ப, 'புள்ளிடை தட்ப' ௧௨௪.

தட - பெருமை, 'தாடோய் தடக்கை' ௧௪.

தடவரல் - வளைவு, 'தடவரல் கொண்ட தகைமெல் லொதுக்கின்' ௧௩௫.

தடவு - ஓமகுண்டம், 'வடபான் முனிவன் றடவினுட் டோன்றி' ௨௦௧. சுனை, 'தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை' ௧௦௫. பெருமை, 'தடவு நிலைப்பலவு' ௧௪௦; 'தடவுச்சினைப் பல்பழம்' ௧௧௯.

தடி - ஊன்றடி, 'என்பொடு தடிபடு வழியெல்லா மெமக்கீயு மன்னே' ௨௩௫. தசை, 'புலவுநாற்றத்த பைந்தடி' ௧௪.

தடியும் - வெட்டும், 'கடிமரந் தடியு மோசை' ௩௬.

தண்டம் - தண்டனை, 'தண்டமுந் தணிதி' ௧௦.

தண்டா - தணியாத, 'தண்டா வீகை' ௬.

தண்மை - குளிர்ச்சி, 'தண்பொருனைப் புனற்பாயும்' ௧௧; மென்மை, 'தண்குரவை' ௨௪.

தண்ணுமை - முழவு, 'விசியுறு தண்ணுமை' ௮௯.

தணிதி - தணிவை, 'தண்டமுந் தணிதி' ௧௦.

ததும்ப - நிரம்ப, 'ததும்ப வைகி' ௧௭௭. மிகவொலிப்ப, 'ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப' ௧௯௪.

ததைய - சிதற, 'அருஞ்சமந் ததைய நூறி' ௯௩; 'அருஞ்சமந் ததையத் தாக்கி' ௧௨௬.

தந்து - கொண்டு, 'ஆரெயில் பலதந்து' ௬.

தப்பிய - பிழைத்த, 'பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்' ௩௪.

தபுதி - அழிவு, 'புறவின் றபுதியஞ்சி' ௪௩.

தம்மென - தாருமென, 'இன்னுந் தம்மென வெம்மனோ ரிரப்பின்' ௨௦௩.

தமர் - தனக்குச்சிறந்தோர், 'தமர்தற் றப்பி னதுநோன் றல்லும்' ௧௫௭.

தமித்து - தனித்து, 'நூறுசெறு வாயினுந் தமித்துபபுக் குணினே' ௧௮௪.

தரீஇய - தரவேண்டி, 'ஆகலியாணர்த் தரீஇயகால் வீழ்த்து' ௨௦௫.

தரூஉந்து - தரும், 'எல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து' ௨௪.

தரூஉம் - தரும், 'யொருபடை தரூஉங் கொற்றமும்' ௩௫.

தலை - இடம், 'பெருங்கை யானையிரும் பிடர்த்தலை யிருந்து' ௩.

தலைஇய - தலைப்பட்ட, 'வளிதலைஇய தீயும்' ௨; பெய்துமாறிய, 'கார்பெய றலைஇய' ௧௧௯.

தலைக்கை - முதற்கை, 'தலைக்கை தரூஉந்து' ௨௪.

தலைக்கொண்ட - தன்னிடத்தேகொண்ட, 'நிலந்தலைக் கொண்ட......ஈரைம் பதின்மரும்' ௨.

தலைக்கொண்டென - தொடங்கிற்றாக, 'சாறுதலைக் கொண்டென' ௮௨.

MAHAMAHOPADHYAYA
DR U V S IYER LIBRARY,
[illegible]



தலைப்பாடு - நேர்படுதல், 'தலைப்பாட்டன்றவனீகை' ௭௦.

தலைப்போகன்மையின் - முடிவுபோகாமையின், 'தலைப்போ கன்மையிற் சிறுவழி மடங்கி' ௨௨௩.

தலைமயங்கிய - கைகலந்த, 'தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து' ௧௯.

ஙயாலங்கானம் - தலையாலங் கானென்னுமூர், 'தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து' ௧௯; இதன் வரலாற்றை, 'ஆலங்கானம்' எனபதிற் காண்க.

தவல் - இறந்துபடுதல், 'அவல மறுசுழி மழுகலிற் றவலே நன்று' ௨௩௮.

தவழ - பரக்க, 'எரிதவழ' ௩௮.

தவிரா - ஒழியாத, 'தவிரா வீகை, ௩.

தழீஇ - தழுவி, 'நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇ' ௬௩. அணைத்துக் கொண்டு, 'ஒருபுடைத் தழீஇ' ௪௬௫.

தழீஇய - அணைத்துக்கொண்ட, 'சிறுமறி தழீஇய தெருநடை மடப்பிணை' ௨௩.

தழும்பனூர் - ஓரூர், 'பாண்சேரி வாய்மொழித் தழும்பனூ ரன்ன' ௩௪௮.

தழை - மகளிரணியும் ஒருவகையுடை; இது மலராலும் தளிராலும் செய்யப்படுவது, ௧௧௬, ௨௪௮.

தள்ளாதோர் - தளையாதவர், 'தள்ளாதோரிவட் டள்ளா தோரே' ௧௮.

தளம்பு - சேறுகுத்தி, 'மலங்குமிளிர் செறுவிற் றளம்புதடிந் திட்ட பழன வாளை' ௬௧.

## தா.

தா - வலி, 'தாவி னன்பொன்' ௧௫௨.

தாக்கி - வெட்டி, 'அருஞ்சமந்ததையத் தாக்கி' ௧௨௬.

தாங்க - பிடிக்க, 'முன்புதுரந்து சமந்தாங்கவும்' ௧௪.

தாங்கி - தடுத்து, 'வருதார் தாங்கி' ௬௨. பொறுத்து.

தாங்கிய - தடுத்த, 'எழுஉத் தாங்கிய கதவு' ௯௭.

தாயம் - உரிமை, 'மலர்தாயத்து' ௧௭; முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்' ௭௩.

தார் - மாலை, 'வண்ண மார்பிற் றாருங் கொன்றை' ௧; 'சிலைத்தார் மார்ப' ௪௦; 'சிலைத்தா ரகலம்' ௬௧. முன்படை, 'ஒண்படைக் கடுந்தார் முன்பு தலைக் கொண்மார்' ௧௫; 'வருதார் தாங்கி' ௬௨.

தாரம் - பலபண்டம், 'கடற்பஃ றாரத்த நாடுகிழ வோயே' ௩௦.

தாலம் - உண்கலம், 'பெருந்தோ டாலம் பூசன் மேவர' ௧௨௦.

தாலி - ஐம்படைத்தாலி; இஃது இளமைபபருவத்திற் கழுத்திலணியும் ஒருவகை அணி, 'தாலி களைந்தன்று மிலனே' என.

தாழை - தெங்கு, 'குலையிறைஞ்சிய கோட்டாழை' ௧௭.

தாள் - முயற்சி, 'தாளிற் றந்து' ௧௮; மதனுடை நோன்றாள்' ௭௫; 'தாளிற் கொள்ளலிர்' ௪௦௧.

தானை - சேனை, 'நிலவரை சூட்டிய நீணெடுந் தானை' ௨௨௮.

## தி.

திகழ்தல் - விளங்குதல், 'மீன்றிகழ் விசும்பு' ௨௫.

திங்கள் - சந்திரன், 'பன்மீ னாப்பட் டிங்கள் போலவும்' ௧௩. மாதம், 'திங்கள் வலித்த காலன் னோனே' ௮௭.

திணிந்த - செறிந்த, 'மண்டிணிந்த நிலனும்' ௨.

திணை - குடி, 'ஆடுகுடி மூத்த விழுத்திணைச் சிறந்த வாளின் வாழ்நர்' ௨௪; 'வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து' ௨௭; விழுத்திணைப பிறந்த விசைமேந் தோன்றல்' ௧௫௧.

தித்தன் - ஒரு சோழன், 'போரருந் தித்தன் காணகதில்' ௮௦; 'மாவண் டித்தன் வெண்ணெல் வேலியுறந்தை யன்ன' ௩௫௨; 'சிறுகண் யானைப் பெறலருந் தித்தன்' ௩௯௫.

திமிரி - திமிர்ந்து, 'எச்சி லீர்ங்கை விற்புறந் திமிரி' ௨௫௮.

திமில் - மீன்படகு, 'திண்டிமில் வன்பரதவர்' ௨௪; 'முந்நீர் நாப்பட் டிமிற் சுடர் போல' ௬௦.

திரங்கி - உலர்ந்து, 'ஒளிறுவாண் மன்னரொண்சுடர் நெடுநகர் - வெளிறு கண போகப் பன்னாட் டிரங்கி' ௧௭௭.

திரங்கிய - உலர்ந்த, 'பசிதினத் திரங்கிய கசிவுடை யாக்கை' ௧௬௦.

திரியினும் - வேறுபடினும், 'நால்வேத நெறிதிரியினும்' ௨.

திரியிர் - வேறுபடீர், 'உடனிலை திரியீ ராயின்' ௫௮.

திருகி - முறுகி, 'விசும்புதிப் பிறப்பத் திருகி' ௬௭.

திருகிய - முறுகிய, 'சினந்திருகிய' உ௫.

திருத்தி - செவ்விதாக்கி, 'கொடிது க டிந்து கோறிருத்தி' ௪௭.

திருவில் - இந்திரவில், 'திருவி லல்லது கொலைவி லறியார்' உ௦.

திரைக்கும் - சுருட்டும், 'நிலந்திரைக் குங் கடற்றானை' ௬௯.

தில்லை - ஒருமரம், 'தில்லை யன்ன புல் லென் சடையோன்' உ௫உ.

திளைப்ப - விளையாடாநிற்க, 'இளையர் திளைப்ப' உ௫௬.

திறத்தல் - திறத்தல் செய்வாயாக, 'அ றவை யாயி னினதெனத் திறத்தல்' - - -

திறம் - கூறுபாடு, 'நிற்றிறஞ் சிறக்க' ௬. பக்கம், 'பெண்ணுரு வொருதிற னாகின்று' ௧.

திறல் - வலி, 'துன்னருந் திறல்' ௬; 'துன்னருங் கடுந்திறல்' ௬௬.

திறவோர் - கூறுபாடறிவோர், 'திற வோர் - காட்சியிற் றெளிந்தனம்' ௧௯உ.

தின்மென - திண்மினென, 'இரும்பே ராக்கலொடு திண்மெனத் தருதலி ன்' ௧௫௦.

தீஞ்சாறு - இனியசாறு, 'பூங்கரும்பின் றீஞ்சாறும்' உ௪.

தீஞ்சுளை - இனியசுளை, 'தீஞ்சுளைப் பல வின் பழமூழ்க் கும்மே' ௧௦௯.

தீட்டி - கோதி, 'கூந்த றீட்டி' ௬உ.

தீது - குற்றம், 'தீதுமருங் கறுமார்' ௬௬.

தீநீர் - இனியஇளநீர், 'குவவுத்தாழைத் தீநீரோடு' உ௪.

தீமை - கொடுமை, 'நீமெய் கண்ட தீமை காணின்' ௧௦.

தீர்தல் - அறுதல், 'செயிர்தீர் கற்பு' ௬.

தீர்ந்தன்று - தீர்ந்தது, 'புரைதீர்ந் தன் றது' ௪உ.

## து.

துகிர் - பவழம், 'பொன்னுக் துகிரு முத்தும்' உ௧௮.

துஞ்சாய் - மடியாய், 'துஞ்சாய் மாறே' உஉ.

துஞ்சுதல் - தங்குதல், 'புலிதுஞ்சு வியன்புலம்' ௫௪.

துஞ்சும் - தங்கும், 'அறந்துஞ்சுஞ் செங்கோலையே' உ௦. தூங்கும், 'முத்தி விளக்கிற் றுஞ்சும்' உ.

துடைக்கும் - தடவும், 'வான்றுடைக் குந் தகையபோல' ௬௮.

துணி - துண்டம், 'வெளிற்றுப் பனந் துணி' ௬௫.

துணியல் - தடி, 'பழன வாளைப் பருஉக்கட் டுணியல்' ௬௧.

துணிவு - தெளிவு, 'துன்னல் போகிய துணிவி னோனென' உ௬; 'துணிவி லோரே' உ௧௪.

துப்பு - வலி, 'துப்புறுவர்' ௧௧; 'கடு மான் கோதை துப்பெதிர்ந் தெழுந்த' ௫௪.

துமிந்து - துணிந்து, 'தூம்புடைத் தடக்கை வாயொடு துமிந்து' ௧௬.

துமிய - துணிய, 'அணங்குடை யரவி னருந்தலை துமிய' உ௧௧.

துய் - பஞ்சு, 'துய்த்தலை மந்தியை' ௧௫௮.

துயின்மடிதல் - உறங்குதல், 'துயின்ம டிந் தன்ன' ௧உ௬.

துரந்து - செலுத்தி, 'முன்பு துரந்து' ௧௪.

துரப்ப - செலுத்த, 'ஊக்கந் துரப்ப' ௮.

துவ்வாள் - உணவாள், 'துவ்வா ளாகிய வென்வெய் யோளும்' ௧௫௬.

துவராபதி - இது பழையவேளிர்களின் நகரம்; இருங்கோவேளுடையது; துவரையெனவும் வழங்கும். 'உவரா வீகைத் துவரை யாண்டு, நாற்பத் தொன்பது வழிமுறை வந்த, வேளி ருள் வேளே' உ௦௧; இது துவாரஸமுத்திரமென்று இப்பொழுது வழங்கப்படுகின்றது. 'அகத்தியனார்... துவராபதிப்போந்து நிலங்கடந்த நெடுமுடியண்ணல்வழிக்கண் அரசர்பதினெண்மரையும் பதினெண்குடி வேளிருள்ளிட்டாரையும் அருவாளரையுங்கொண்டுபோந்து காடுகெடுத்து நாடாக்கி' எனத் தொல்காப்பியப்பாயிர வுரையிலும், 'மலயமாதவன் நிலங்கடந்த நெடுமுடியண்ணலுழை நரபதியருடன்கொணர்ந்த பதினெண் வகைக் குடிப்பிறந்த வேளிர்க்கும்' என அகத்திணையியல் ௩உ-ம் சூத்திரவுரையிலும் நச்சினார்க்கினியரெழுதியிருத்தல்காண்க.

20778.



துவரை - துவராபதி, ௨௦௧.

துவை - உணவின்விசேடம், 'ஊன்றுவை - கறிசோ றுண்டு' ௧௪ ; 'அட்டான் றானுக் கொழுந்துவை யூன்சோறு' ௧௧௯.

துவைத்து - ஒலித்து, 'துவைத்தம்பிற் றுனைதோன்றுவ' ௪.

துழந்த - துழாவிய, 'துடுப்பிற் றுழந்த' ௨௬.

துழந்து - துழாவி, 'இட்டுந் தொட்டுங் கௌவியுந் துழந்தும்' ௧௮௮.

துழவும் - சூழ்வரும், 'மாதிரந் துழவுங்-கவலை நெஞ்சத்து' ௧௭௪.

துளங்கல்செல்லாது - தளராது, 'தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல்செல் லாது' ௫௮.

துளங்கிய - நிலைகலங்கிய, 'கடிமரந் துளங்கிய காவும்' ௨௯.

துளங்கின - தளர்ந்தன, 'குடைதுளங்கினவே' ௬௨.

துளங்குதல் - அசைதல், 'துளங்கியலாற் பனையெருத்தின' ௧௫.

துறுகல் - பொற்றைக்கல், 'மாத்தகட் டொள்வீ தாய துறுகல' ௨௦௨.

துறையூர் - ஓரூர், 'தண்புனல் வாயிற் றுறையூர் முன்றுறை, நுண்பல மணலினும்' ௧௩௬.

துன்னம் - தையல், 'இழைவலந்த பஃறுன்னத்து' ௧௩௬.

துன்னல் - அணுகுதல், 'துன்னல் போகிய' ௨௯.

## தூ.

தூஉய் - தூவி, 'உயர்பலி தூஉய்' ௧௪௯.

தூங்க - ஆட, 'பறைச்சீர் தூங்க' ௬௨.

தூங்குதல் - செறிதல், 'தூங்கிரு ளிறும்பில்' ௧௨௬.

தூங்குந்து - ஆடும், 'தண்குரவைச் சீர் தூங்குந்து' ௨௪.

தூம்பு - துளை, 'தூம்புடைத் தடக்கை' ௧௩.

தூவல் - துவலை, 'தூவற் கலித்த தேம் பாய் புன்னை' ௨௪.

தூவாத - உண்ணாத, 'தூவாக் குழவி போல' ௪.

## தெ.

தெரிகோல் - பொருள்களை ஆராயும் துலாக்கோல், 'தெரிகோ னமன்ன் போல' ௬.

தெரியல் - மாலை, 'பாசிலைத் தெரியல்' ௨௯ ; 'பொலனறுந் தெரியல்' ௨௩ ; 'ஆர்புனைதெரியல்' ௮௨.

தெவ்வர் - பகைவர், 'செய்வினைக் கெதிர்ந்த தெவ்வர்' ௬.

தெவ்விர் - பகைவிர், 'களம்புகலோம்புமின்றெவ்விர்' ௮௭.

தெவிட்டும் - அசையிடும், 'வன்கலை தெவிட்டும்' ௧௬௧.

தெற்றி - திண்ணை, 'இலங்குவளை மகளிர் தெற்றி யாடும்' ௫௯ ; வேதிகை, 'குறுந்தொடி மகளிர் பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடும்' ௯௬.

தெறல் - அழித்தல், 'வலியுந் தெறலு மளியு முடையோய்' ௨ ; வெம்மை, 'செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது' ௨௦.

தெறிக்கும் - துள்ளும், 'தாவுபு தெறிக்கு மான்மேல்' ௨௫௩.

தெறித்தல் - துள்ளல், 'தெறிநடை மடப்பிணை' ௨௯.

தெறிப்ப - முற்ற, 'தெறிப்ப விளைந்த தீங்கந் தாரம்' ௨௫௮.

தெறுகதிர் - சுடுகின்றகதிர், 'தெறுகதிர்க் கனலி' ௬௯.

தெறுதல் - சுடுதல், 'தெறுசுடரொண்கதிர் ஞாயிறு' ௧௫. தண்டஞ்செய்தல், 'கொடியோர்த் தெறுதலும்' ௨௩.

தெறுவர - வெகுட்சிதோன்ற, 'தெறுவர விருபாற் படுக்குநின் வாய்வாள்' ௫௦.

தெறுழ் - காட்டிலுள்ள தோர்கொடி ; புளிமாவென்றுமுரைப்பர், 'தெறுழ் வீ பூப்ப' ௧௧௩.

தென்புலவாழ்நர் - தென்றிசைக்கண்வாழ்வோர்=பிதிரர், 'தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும் பொன்போற் புதல்வா' ௩.

தென்னம்பொருப்பு - பொதியின்மலை, 'தென்னம் பொருப்ப னன்னாடு' ௯௯.

தெனாது - தெற்கின்கண்ணது, 'தெனாஅ துருகெழு குமரி' ௬.

## தே.

தேம் - தேயம், 'தெவ்வர் தேஎத்து' ௬. தேன், 'தேம்பாய் புன்னை' ௨௪.

தேர்க்கால் - குயவன் கலம்வனையுந் திகிரி; தேர்க்கால்போன்றிருத்தலின் இப்பெயர்பெற்றது, 'வேட்கோச் சிறாஅர் தேர்க்கால் வைத்த பசுமண்' ௯௨.

தேற்ருய் - தெளியாய், 'தேற்ருய் பெருமபொய்யே' ருக.

தேறலை - தெளியாய், 'பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே' க0.

### தை.

தைஇ - செய்த, 'பாணர் சென்னி பொலியத் தைஇ' கஉசு.

தைஇய - செய்துபுனைந்த, 'கழறைஇய வல்லாளனை' ச0. புனைந்துசெய்த, 'வல்லோன் றைஇய' கூகூ.

தைவருதல் - தடவிவருதல், 'விசும்பு தைவரு வளியும்' உ.

### தொ.

தொகுக்கும் - திரட்டும், 'தொகுக்குங் கொழுமீன்' கூ.

தொட்டு - செறித்து, 'கழறொட்டு' எஎ. தோண்டி, 'மைந்தர் புண்டொட்டு' கூஉ.

தொடர் - சங்கிலி, 'தொடர்ப்படு ஞமலியின்' எச.

தொடி - பூண், 'தொடித்தலை விழுத்தண்டு' உசகூ. வளை, 'ஒண்டொடி மகளிர்' உச; 'தொடிகழித் திடுதல்' அகூ. வீரவளை, 'தொடித்தோள்' உசு.

தொடுக்குவர் - வளைத்துக்கொள்வர், 'தமதெனத் தொடுக்குவ ராயின்' ககூரு.

தொடுதல் - தோண்டுதல், 'தொடுகடல்' சு.

தொடுமின் - பிழிமின், 'நறவுந் தொடுமின்' உசுஉ.

தொடை - சந்து, 'தொடைப் பொலிந்த வலிகெழு தோன்ருள்' எஅ; தொடுத்தல், 'செந்தொடை பிழையா வன்கணுடவா' கூ; யாழ்நரம்பு, 'தேவர்ந் தீந்தொடைச் சீறியாழ்' எ0.

தொண்டி - இது கடற்கரையிலுள்ளதொரு நகரம், சேரருடையது, 'தண்டொண்டியோ ரடுபொருந' கஎ; 'கண்ணறும்மே கானலந் தொண்டி' சஅ.

தொலைஇயோன் - தொலைவித்தோன், 'தொலைஇயோ னிவனென' கஉரு.

தொலைச்சி - தொலைத்து, 'வெங்கட்டொலைச்சியு மமையாா' உகூ ; 'தசும்புடன் ருெலைச்சி' உஉச.

தொலைச்சிய - தொலைத்த, 'மான்கணந் தொலைச்சிய' கரு0.

தொழில் - செயல், 'பிறிதுதொழி லறியா வாகலின்' கச.

தொழுதி - கூட்டம், 'இரும்பிடித் தொழுதி' சச.

தொழுவர் - உழவர், 'நெல்லரி தொழுவர்' உ0கூ.

தொன்று - பழைமை, 'தொன்றிசை' உகஎ.

### தோ.

தோட்டி - அங்குசம், 'பொன்னியற் புனைதோட்டியால்' கச. ஒருமலை, இது கண்டீரக்கோப்பெரு நள்ளியுடையது, 'இரும்புபுனைந் தியற்ருப் பெரும் பெயர்த் தோட்டி' கரு0.

தோடு - இதழ், 'பொலந்தோட்டுப் பைந்தும்பை' உஉ. இலை, 'தோடொலிபு நந்தி' கஉ0. தொகுதி, 'தோடுகொண் முரசு' உகூஅ.

தோண்டாது - பறியாமல், 'மிசைப்பரந் தோண்டாது' கூ0.

தோய்தல் - பொருந்துதல், 'தாடோய் தடக்கை' கச.

தோல் - கேடகம், 'தோல் - துவைத் தம்பிற் றுளைதோன்றுவ' ச. பரிசை, 'மழையுருவின தோல்பரப்பி' கசு; 'தோல்கழியொடு பிடிசெறிப்பவும்' கூஎ. யானை, 'தோல்பெயரிய வெறுழ்முன்பின்' எ.

தோற்றம் - காட்சி, 'அறத்து வழிப்படூஉந் தோற்றம் போல' கூக.

தோன்றல் - தலைவன், 'புகழ்சா ன்ருேன்றல்' உக

### ந.

நக்க - சுடுக, 'எரியு நக்க' ருஎ.

நகர் - கோயில், 'முக்கட் செல்வர் நகர்' சு, 'ஒளிறுவாண் மன்ன ரொண்சுடர் நெடுநகா.' நகரம், 'நெடுநகர் வினைபுனை நல்லில்' உகூ.

நகாஅல் - நகுகின்றிலேன், 'நகாஅலென வந்த மாறே' உருகூ.

நகுதக்கனர் - சிரிக்கத்தக்கார், 'நகுதக்கனரே நாடுமீக் கூறுநர்' எஉ

நகை - மகிழ்ச்சி, 'வாயார் பெருநகை' உகஉ.

நசை - ஆசை, 'நசைதர வந்தோர் நசைபிறக் கொழிய' கரு.

நசைவர் - விரும்பிவந்தோர், 'நசைவர்க்கு மென்மை யல்லது' கஎ0.

நசைவேட்கை - நச்சியவிருப்பம், 'நின்னசை வேட்கையி னிரவலர் வருவர்' கூ.

நடுக்கு - நடுக்கம், 'நடுக்கின்றி நிலீஇயரோ' உ.

நடுங்க - தலையசைத்துக்கொண்டாட, 'சிறியாழ் நயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி' கசரு.

நணுநர் - பகைவர், 'நண்ணார் நாண நாடொறுந் தலைச்சென்று' உரு.

நணி - அணிமை, 'திரைபொரு முந்நீர்க் கரைநணிச் செலினும்' கருச.

நம்பி - விரும்பி, 'வாயாரநின் னிசைநம்பி' கருசு.

நயந்து - மகிழ்ந்து, 'நயந்தளித்தல்' ருக. விரும்பி, 'நலனயந் தென்றும் வருஉம்' கசச.

நயம் - இன்பம், 'நயம்புரிந் துறையுநர்' கசரு.

நயவ - நியாயத்தை யுடையன, 'நல்ல போலவு நயவ போலவும்' ருஅ.

நயன் - ஈரம், 'நயனில் கூற்றம்' உஉ௰.

நரந்தம் - நரந்தப்பூ, 'நரந்த நாறுந் தன் கையால்' உகரு.

நரலுதல் - மூங்கிலிழைந்தொலித்தல், 'ஆடுகழை நரலும்' கஉ௦.

நல் - வறுமை; நல்குரவென்பது நல்லெனக் குறைந்து நின்றது; 'கல்குயின் றன்னவெனல்கூர் வளிமறை' ககசு.

நல்க - அளிக்க, 'பரிசிலர்க் கருங்கல நல்கவும்' கச.

நல்கி - கொடுத்து, 'பரிசின் மாக்கட்கு வரிசையி னல்கி' சு.

நல்கினும் - உவப்பினும், 'நல்கினு நல்கா ரயினும்' அ௦.

நல்லவர் - பெண்டிர், 'நல்லவர்க் காரணங் காகிய மார்பு' கச.

நல்லியக்கோடன் - ஓய்மா நல்லியக்கோடன், 'பெருமா விலங்கைத் தலைவன் சீறியா - ழிலவேலோர் சொன்மலை நல்லியக் கோடனை' கஎசு.

நவ்வி - மான்குட்டி, 'சிறுதலை நவ்வி' உ.

நவியம் - கோடாலி, 'வடிநவி னவியம் பாய்தலின்' உரு; 'நெடுங்கை நவியம் பாய்தலின்' ருசு.

நவியம்பாய்தல் - வெட்டுதல், உரு; ருசு.

நவிலுதல் - பயிலுதல், 'மறைநவி லந்தணர்' க.

நள்ளி - கண்டீரக்கோப் பெருநள்ளி; இவன் ஒருவள்ளல், 'பிறங்குமலை நள்ளி' கசஅ; 'நளிமலை நாடனள்ளியவனெனவே' கரு௦; 'ஆர்வமுற் - றுள்ளி வருந ருலைவுநனி தீரத் - தள்ளா தியுந் தகைசால் வண்மைக்-கொள்ளா ரோட்டிய நள்ளியும்' கருஅ.

நன்னொன்மாலை - நன்னென்னும் ஓசையையுடையமாலை, 'நன்னொன் மாலை மருதம் பண்ணி' கசக.

நளி - குளிர்ச்சி, 'மரம்பிறங்கிய நளிச்சிலம்பு' கருசு. செறிவு, 'நளியிரு முந்நீர்' சுசு. பெருமை, 'நளிகடல்' உசு.

நளிய - செறிவையுடைய, 'நன்மர னளிய நறுந்தண் சாரல்' கரு௦.

நற்கு - நன்கு, 'அதுநற் கறிந்தனை யாயின்' ருரு; 'அதுநற்கறிந்தனையாயின்' கஉக.

நறும்புல் - ஒருவகைப்புல், 'நரந்தைநறும்புன் மேய்ந்த கவரி' கருஉ.

நறுமை - நன்மை, 'பொலனறுந் தெரியல்' உரு.

நறை - நறைக்கொடி, 'நறைநார்த் தொடுத்த வேங்கையங் கண்ணி' கசுஅ

நன்று - பெரிது, 'நன்று மெல்லிய பெரும' கச; 'நன்று கொய்தா லம்ம' எரு. நல்வினை, 'சான்றோர் செய்த நன்றுண் டாயின்' ருச.

நன்னன் - ஒருசிற்றரசன், 'பொலந்தேர் நன்னன் மருகன்' கருக.

நனந்தலை - அகன்றவிடம், 'நனந்தலை நல்லெயில்' கரு; 'நனந்தலைப் பேரூர்' ருஎ; 'கழைபயி னனந்தலைக் கறிவளரடுக்கம்' கசுஅ.

## நா.

நாகன் - நாலைகிழான்நாகன், 'திருந்துவே ணாகன்' கஎக.

நாஞ்சில் - கலப்பை, 'நாஞ்சி லொப்ப நிலமிசைப் புரள' கக; நாஞ்சின்மலை, 'செவ்வரைப் படப்பை நாஞ்சிற் பொருந' கஙஎ; 'உயர்சிமய வுழாஅ நாஞ்சிற் பொருந' கஙக; 'தடவுநிலைப் பலவி னாஞ்சிற் பொருநன்' கச௦; 'தீஞ்சுளைப் பலவி னாஞ்சிற் பொருந' ஙஅ௦.

நாட்டம் - ஆராய்ச்சி, 'அறம்புரிந் தன்ன செங்கோ னாட்டத்து' ருரு; 'நாற்ற நாட்டத் தறுகாற் பறவை' எ௦.

நாட்டை - நாட்டையுடையாய், 'ஆடுகளங் கடுக்கு மகநாட் டையே' உஅ.

நாடல் - ஆராய்தல், 'நாடல் சான்ற மைந்தினோய்' கரு.

நாடன்-குறிஞ்சிநிலமுடையோன், 'நாட னென்கோ வூர னென்கோ' ௪௯.

நாடனை - நாட்டையுடையாய், 'கானக நாடனை நீயோ' ௫; 'பெருங்க னுட னை' ௧௩௭.

நாடி - ஆராய்ந்து, 'ஒப்ப நாடி' ௧0.

நாப்பண் - நடு, 'பன்மீ னுப்பட் டிங் கள் போலவும்' ௧௩; 'முந்நீர் நாப்பட் டிமிற்சுடர் போல' ௬0.

நாம் - அச்சம், 'நாம நல்லமர் செய்ய' ௧௬.

நாய் - சூதாடுகருவி, 'நாயிடக் குழிந்த - வல்லி னல்லகம்' ௫௨.

நார் - பன்னாடை, 'நார்பிழிக் கொண்ட வெங்கள்' ௧௭0; 'நாரரி' ௨௩௨.

நாலைகிழவன் - நாலைகிழவனாகன், 'தோ லா நல்லிசை நாலை கிழவன் - பருந்து பசி தீர்க்கு நற்போர்த் - திருந்துவே ளாகன்' ௧௭௯.

நாவாய் - மரக்கலம், 'முந்நீர் வழங்கு நாவாய்' ௧௩.

நாள் - காலை, 'நாண்மகி ழிருக்கை' ௨௯.

நாளவை - நாளோலக்கம், 'செம்ம னுள வை யண்ணாந்து புகுதல்' ௫௪.

நாற்றம் - மணம், 'நாற்ற நாட்டத் தறு கால் பறவை' ௭0.

## நி.

நிமிர்தல் - மிகைத்தல், 'நிமிர்பரிய மா தாங்கவும்' ௧௪.

நிரயங்கொள்பவர் - நரகத்தைத் தமக்கு இடமாகக்கொள்பவர், 'நிரயங் கொ ள்பவரொ டொன்றாது' ௫.

நிரயம் - நரகம், ௫.

நிணக்கும் - கட்டும், 'கட்டி னிணக்கு மிழிசினன்' ௮௨.

நிலவு - நிலைத்தல், 'நிலவுக்கடல் வரைப்பு' ௩.

நிலியர் - நிற்பாயாக, 'நடுக்கின்றி நிலி யரோ வத்தை' ௨.

நிலீயர் - நிலைபெறுவாயாக, 'நிலீய ரத் தைநீ நிலமிசை யானே' ௧௬௬.

நிலை - நிற்றல், 'பணைநிலை முனைஇ' ௨௩.

நிலைஇய - நிலைபெற்ற, 'வறிது நிலைஇய காயமும்' ௨0; 'செந்தில் - நெடுவே ணிலைஇய காமர் வியன்றுறை' ௫௫; 'வறிது நிலைஇய காயமும்' ௩0.

நிலைஇயர் - நிற்பதாக, 'நின்று நிலைஇயர் நின னுண்மீன்' ௨௪.

நிலையழிந்து - நிலைகலங்கி, 'நவியம்பாய் தலினிலையழிந்து' ௩௬.

நிவந்து - ஓங்கி, 'மாக்கட னிவந்தெழுத ரும்' ௪; 'உருகெழு மதியி னிவந்து சேண் விளங்க' ௩௧.

நிவப்பு - ஓங்குதல், 'நீர்நிலை நிவப்பு' ௬; 'நீரழுவ நிவப்பு' ௧௪.

நிழற்ற - நிழலைச்செய்ய, 'வெண்குடை - மண்ணக நிழற்ற' ௩.

நிழற்றிய - நிழலைச்செய்த, 'வெண்குடை நிழற்றிய' ௧௮௯.

நிழற்றும் - நிழலைச்செய்யும், 'கொடிவி சும்பு நிழற்றும்' ௯; 'தீயின் - மன் னுயிர் நிழற்று நிழறு.மில்லை' ௫௧.

நிற்பின்-நின்றால, 'முந்தை நிற்பின்' ௧0.

நிறீஇ - நிறுத்தி, 'தம்புகழ் நிறீஇ' ௧௮.

நினவ - நின்னுடையனசிலகாரியம், 'நி னவ கூறுவல்' ௩௫.

## நீ.

நீர்-தன்மை, 'செந்நீர்ப் பசும்பொன்' ௯.

நீர்த்து - தன்மையையுடையது, 'இது நீர்த்தோ நினக்கென' ௪௩.

## நு.

நுணங்கு - நுண்மை, 'நுணங்கு செந்நா வணங்க வேத்தி' ௨௧௧.

நுணுகி-மெலிந்து, 'தோ ணுணுகி' ௯௬.

நுதல் - சென்னி, 'குடுமி களைந்த நுதல்' ௭௭. யானைமத்தகம், 'புகரணிநுதல்' ௩; 'பூநுதல் யானை' ௧௨.

நுதி-நுனி, 'நுதிமழுங்கிய வெண்கோடு' ௪; 'நுதிமுக மழுங்க' ௩௧.

நும்மோரன்ன-நும்மைப்போலும், 'நும் மோ ரன்ன வேந்தர்' ௪௫; 'நும்மோ ரன்ன செம்மலு முடைத்தே' ௪௭.

நுவல - சொல்ல, 'ஈகை நுவல' ௨௪.

நுவலும் - சொல்லும், 'அறத்தாறு நுவ லும்' ௯.

நுழைகல்லா - நுழையாத, 'கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை' ௨௧.

நுனை - நுனி, 'கூர்நுனை வேல்' ௪௨.

## நூ.

நூறி-அறைந்துகொண்டு, 'மூலைபொலி யாக முருப்ப நூறி' ௨௫; வெட்டி, 'அருஞ்சமம் ததைய நூறி' ௯௩.

## நெ.

நெடியோன் - வடிம்பலம்பநின்றபாண் டியன், 'முந்நீர் விழவி னெடியோன்' ௯.

நெடுமாவளவன் - சோழன்குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவன், 'கொடிநுடங்கு யானை நெடுமா வளவன்' உஉஅ.

நெடுமானஞ்சி - அதியமான்நெடுமானஞ்சி, 'நெடுமானஞ்சிநீ யருளன் மாறே' கூஉ; 'கடுமான் றோன்ற னெடுமானஞ்சி' உ0சு.

நெடுமொழி - வஞ்சினம், 'நெடுமொழி மன்னர்' ருச. வீரமேம்பட்டவார்த்தை, 'நெடுமொழி மறந்த சிறுபேராளர்' கஎஅ.

நெடுவேளாதன் - ஒரு சிற்றரசன், 'நெடுவே ளாதன் போந்தை யன்ன' கூகூஅ.

நெய்தல - சாக்காட்டுப்பறை, 'ஓரி னெய்தல் கறங்க' ககூச.

நெய்தலங்கானல் - இஃது இளஞ்சேட்சென்னியூர், 'நெய்தலங் கான னெடியோய்' க0; இது நெய்தலங்காலெ யெனவும் வழங்கும்.

நெய்ம்மிதி - நெய்யால்மிதித்துத் திரட்டப்பட்ட கவளம், 'நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெறாஅ' சச.

நெருநை - நேற்று, 'நெருநைப் பகலிடங்கண்ணி' உசக.

நெளிமருங்கு - குழிந்த இடம், 'நிலனெளி மருங்கின்' கஅ.

நெளிய - வருந்த, 'பொய்யாச் செந்நா நெளிய வேத்தி' கசுஅ.

நெறி - ஒழுக்கம், 'நாஅல்வேத நெறி திரியினும்' உ; முடக்கம், 'நெறி கொள் வரிக்குடர்' கசு0.

## நே.

நே - ஈரம், 'நேஎ நெஞ்சின்' ரு.

நேமி - சக்கரம், 'நேமி யுய்த்த' ரு.

## நை.

நைத்தல் - அழித்தல், 'நாடு நைத்தலின்' கூஎ.

நைவர - இரங்க, 'நல்கா மையி னைவரச் சாஅய்' கசசு.

## நொ.

நொதுமலாளர் - குறளைகூறுவார், 'நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது' ருரு.

## நோ.

நோக்கின்று - நோக்கியது, 'மறுமை நோக் கின்றோ வன்றே' கசக.

நோகு - நோவேன், 'நோகோ யானே' ககசு, உருச.

நோன் - வலி, 'சாப நோன்ஞாண்' கரு; 'மதனுடை நோன்றாள்' ஙரு.

நோன்றல் - பொறுத்தல், 'தமர்தற் றப்பி னதுநோன் றல்லும்' கருஎ.

## ப.

பஃறுளி - வடிம்பலம்பநின்ற பாண்டியனாலுண்டாக்கப்பட்டதோராறு, 'முந்நீர் விழவி னெடியோ னன்னீர்ப் பஃறுளி' கூ

பகடு - ஏர், 'பகடு புறந்தருநர் பார மோம்பி' ருரு கடா, 'பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ' கூ0 பரப்பு, 'பகட்டெழின் மார்பின்' கரு. 'ஆரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பின்' கருஉ. வலி, 'கதிர்விடு நுண்பூ ணம்பகட்டு மார்பின்' அஅ; 'அலர்பூந் தும்பை யம்பகட்டு மார்பின்' கூசு.

பகல் - சூரியன், 'பகலிருளினும்' உ. நடுவுநிலைமை, 'படுவ துண்டு பகலாற்றி' கஎ பகற்பொழுது, 'பகல்விளங் குதியால்' அ. பகுத்தல், 'நெருநைப் பகலிடங் கண்ணி' உசக.

பகழி - அம்பு, 'விழுத்தொடைப் பகழி' கருஉ.

பகன்றை - பகன்றைப்பூ, 'பனித்துறைப் பகன்றை' உருரு.

பசுநூன் - செவ்வித்தசை, 'பசுநூன் றின்று' உருஅ

பச்சை - தோல், 'பச்சை நல்யாழ்' ககூச.

பசலை - பொன்னிறம், 'பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ' கருரு.

பசும்பொன் - ஓட்டற்றபொன், 'பாணன் சூடிய பசும்பொற் றாமரை' கசக.

பஞ்சவர் - பாண்டியர், 'செருமாண் பஞ்சவ ரேறே' ருஅ.

பஞ்சி - பஞ்சு, 'பஞ்சி முன்றிற் சிற்றில்' ககசு.

பஞிலம் - தொகுதி, 'பன்னூ றடுக்கிய வேறுபடு பஞிலம்' கூஉ.

பட்டமாறு - பட்டபடியால், 'பெருந்தகை விழுப்புண் பட்ட மாறே' கூரு.

பட்டன்று - பட்டது, 'மைந்துபட் டன்றே' கரு; 'ஆங்குப் பட்டன் றவன் கைவண் மையே' கருச.

பட்டென - பட்டதாக, 'அறுமருப் பெழிற்கலை புலிப்பாற் பட்டென' உரு.

படு - மொய்ப்ப, 'வண்டுபட மலர்ந்த' உச.

படப்பை - பக்கம், 'பாசவற் படப்பை' சு; 'பெரும்புனற் படப்பை' கஅ; 'தண்புனற் படப்பை' கசுசு. மனைப் பக்கம், 'வனைக்கை விறலியர் படப்பைக் கொய்த அடகு' கசo.

படர் - நினைவாலுண்டாகிய நோய், 'அரும்படர் களைமே' கசரு.

படர்தி - போகின்றாய், 'அன்னோற் படர்தி யாயின்' சஅ.

படர்ந்து - நினைத்து, 'வள்ளியோர்ப் படர்ந்து' சஎ; 'நாறிருங் கூந்தற் கிழவரைப் படர்ந்தே' ககரு.

படாஅ - பட்டு, 'படாஅச் செலீயர்நின் பகைவர் மீனே' உச.

படியினை - படிவித்தனை, 'காப்புடைய கயம்படியினை' கரு.

படுக்கும் - உண்டாக்கும், 'சோறுபடுக் குந் தீயோடு' உo.

படுத்த - வீழ்த்த, 'எறிந்துகளம் படுத்த வேந்தவாள்' கசு.

படுத்து - செய்து, 'இடர்ப்படுத் திரீஇய'

படுதல் - விளித்தல், 'படுமணி யிரட்டும்' சஉ.

படுபு - தோன்றுதல், 'படுபறி யலனே பல்கதிர்ச் செல்வன்' ருச.

படுமலை - ஒருவகைப்பாலைப்பண், 'படுமலை நின்ற பயங்கெழு சீறியாழ்' கருரு.

படை - ஆயுதம், 'எயிறு படையாக' ரு; 'ஒண்படைக் கடுந்தார்' கரு. குதிரைக்கலம், 'பொலம்படைக் கலிமா' ககசு; 'ஒளிறுபடைப் புரவிய தேரும்' கருரு. கொளுத்து, 'திண்படை கலங்கிச் சிதைதலுய்ந் தன்றோ நின் வேல்' உரு.

படைத்திசினோர் - படைத்தவர், 'உடம்பு முயிரும் படைத்திசி னோரே' கஅ.

படைப்பு - செல்வம், 'வாழிய பெரும நின் வரம்பில் படைப்பே' உஉ.

படைமடம் - வீரரல்லாதார்மேலும் முதுகிட்டார்மேலும் புண்பட்டார்மேலும் மூத்தார் இளையார்மேலும் போர் செய்தற்குச்செல்லுதல், 'படைமடம் படாஅன்பிறர் படைமயக் குறினே' கசஉ.

பண்டை - முன், 'பண்டையிற் பெரிதே' சo.

பண்ண - ஏற்ப அமைக்க, 'புனைதேர் பண்ணவும்' கஉ.

பண்ணன் - சிறுகுடிகிழான்பண்ணன், 'கைவள் ளீகைப் பண்ணன் சிறுகுடி' எo; 'யான்வாழு நாளும் பண்ணன் வாழிய' கஎரு. வல்லார்கிழான்பண்ணன், 'வலாஅ ரோனே வாய்வாட் பண்ணன்' கஅக.

பணி - ஏவல், 'வேற்றரசு பணிதொடங்குநின்' கஎ.

பணியியர் - தாழ்க, 'பணியிய ரத்தைநின் குடையே முனிவர் - முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே' சு.

பணை - குதிரைப்பந்தி, 'பணைமுனிந்து-கலியற் புரவி யாலு மாங்கண' கஎஅ. பெருமை, 'பணையெருத்தின்' கரு; 'பராவடிப் பணைத்தாள்' எஉ. மருதநிலம், 'பெருந்தண்பணை பாழாக' கசு. யானைக்கூடம், 'பணைநிலை முனைஇக் - களிறுபடிந் துண்டெனக் கலங்கிய துறையும்' உரு.

பதத்தை - செவ்வியையுடையாய், 'இன்சொலெண் பதத்தை யாகுமதி' சo.

பதம் - உணவு, 'பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்' உ; 'கொள்பத மொழிய' உரு. கால், 'எறிபதத்தா னிடங்காட்ட' ச. காலம், 'எறிபதத்தான்' ச. செவ்வி, சo; 'கொழுங்கொடி விளர்க்காய் கோட்பத மாக' கஉo; 'பதனன்று புக்கு' கஉச. தாம், 'பெண்டிருந் தம்பதங் கொடுக்கும்' கருக.

பதலை - ஒருகணமாக்கிணையென்னும் பறை, 'நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கி' சுச; 'ஒருதலைப் பதலை தூங்க' கoரு, 'பதலை யொருகண் பையென வியக்குமின்' கருஉ.

பதுக்கை - கற்குவியல், 'அம்புவிட வீழ்ந்தோர் வம்பப் பதுக்கை' ரு. திட்டை, 'பாலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி' உகுச.

பயந்த - பூத்த, 'சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ் - நூற்றித ழலர்' உஎ.

பயம்-பயன், 'பயங்கெழு மாநிலம்' ருஅ.

பயம்பு - குழி, 'மாப்பயம்பின் பொறை போற்றாது' கஎ.

பயன் - பிரயோசனம், 'பயன்றிகழ் வைப்பின்' எ.

பயிர் - மிருகங்களுள் ஒன்றை மற்றொன்று அழைக்கும் ஓசைக்குறிப்பு, 'கடமா னல்லேறு மடமா னருபிணை பயிரழைப்பின்' கருஎ.

பயிரும் - அழைக்கும், 'கடுவன் - றய்த் தலை மந்தியைக் கையிடூஉப் பயிரும்' கருஅ.

பயிலுதல் - செறிதல், 'மரம்பயில் கடிமிளை' உக.

பயிற்றி - பலகாற்கூறி, 'வேண்டுமொழி பயிற்றி' ௩௪.

பரக்கும் - பரவும், 'ஆனிற்பரக்கும் யானைய முன்பிற் - கானகம்' ரு.

பரணன் - ஒருபுலவர், 'பரணன் பாடினன் மற்கொல்' ௬0.

பரதவர் - நுளையர், 'திண்டிமில் வன்பரதவர்' உச.

பரம் - பாரம், 'மிசைப்பரந் தோண்டாது' ௩0.

பரல் - பருக்கைக்கல், 'பரலுடை மருங்கில்' உசுச.

பரி - கதி, 'அலங்குளைப் பரிஇ யிவுளி' ச. குதிரைநடை, 'கதழ்பரிய கலிமாவும்' ருரு. செலவு, 'நிமிர்பரிய மாதாங்கவும்' கச; 'வண்பரி நெடுந் தேர்' கசசு.

பரிக்கும் - தாங்கும், 'மண்டமர்ப் பரிக்கு மதனுடை நோன்றாள்' எரு.

பரிசிலர் - இரந்துவந்தோர், 'பரிசிலர்க் கருங்கல நல்கவும்' கச.

பரிசின்மாக்கள் - பரிசிலர், 'பரிசின் மாக்கட்கு வரிசையி னல்கி' சு.

பரிதல் - ஓடுதல், 'பொலம்பைந்தார்கெடப்பரிதலின்' கூஎ.

பரிதி - வட்டம், 'பரிதி ஞாலத்து' கஎச.

பரிந்து - துணிந்து, 'கால்பரிந்துருள' உஉக.

பரிப்பு - இயக்கம், 'அஞ்ஞா யிற்றுப் பரிப்பும்' ௩0.

பரியல் - இரங்குதல், 'பரியல் வேண்டா' கஎஉ.

பரிவு - அன்பு, 'பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்' கஅச; இரக்கம், 'பற்றா மாக்களிற் பரிவுமுந் துறுத்து'.

பருத்திப்பெண்டு - பருத்திநூற்கும் பெண்டு, 'பருத்திப் பெண்டின் பனுவ லன்ன' கஉரு.

பல்லியாடிய - தாளியடிக்கப்பட்ட, 'பல்லி யாடிய பல்கிளைச் செவ்வி' கஉ0.

பலகை - கேடகம், 'இலங்குபொன் னெறிந்த பலங்கிளர் பலகை' கரு.

பவர் - கொடி, 'உழிஞைப் பவரொடு மிடைந்து' எசு.

பழனம் - பொய்கை, 'பழன வாளை' சுக. வயல், 'பழன மஞ்ஞை யுகுத்த பீலி' க௩.

பழி - குற்றம், 'பிறர்பழி கூறுவோர்' ௬. வசை, 'பழிதீ ராற்றல்' உஉஎ.

பழிச்சி - வாழ்த்தி, 'நிற்பழிச்சிச்சேறும்' கக௩.

பழிதாரா - பழிக்கப்படாத, 'படைப் பழி தாரா மைந்தினை யாதலும்' கருஎ.

பழுமரம் - பழுத்தமரம், 'யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன' கஎ௩.

பழுனி - முதிர்ந்து, 'பெருவளம் பழுனி' கக௩.

பள்ளி - சாலை, 'திணிமணற் புதுப்பூம் பள்ளி' ௩௩.

பற்றலிலியர் - பற்றுதொழிக, சு.

பறந்தலை - பாசறை, 'களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை' சுச. பாழ், 'பூளை நீடிய வெருவரு பறந் தலை' உ௩. பாழ்பட்டவிடம், 'கள்ளி போகிய களரியம் பறந்தலை' உஉரு. பாழிடமாகியபுறங்காடு, 'கள்ளியம் பறந்தலை' உச0. போர்க்களம், 'கூற்றுக் கண்ணோடிய வெருவரு பறந் தலை' கக; 'களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை' ௩ரு; கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை' சுசு.

பறம்பு - ஒருமலை; இது பாரியென்னும் வள்ளலுடையது, 'பறம்பு பாடின ரதுவே' க0அ; 'அளிதோ தானே பாரியது பறம்பு' க0௬; 'உடன்றனிராயினும் பறம்புகொளற் கரிதே' கக0; 'சேறும் வாழியோ பெரும்பெயர்ப் பறம்பே' கக௩; 'பறம்பிற் கோமான் பாரியும்' கருஅ; 'பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்' கஎசு; 'பாரி பறம்பிற் பனிச்சுனை போல' ௩௩எ. பறம்புநாடு, பாரியென்பவனுடைய நாடு, 'முந்நூ றூர்த்தே தண் பறம்பு நன்னாடு' கக0; 'தேர்வண் பாரி தண் பறம்பு நாடே' ககஅ.

பறைந்தன - நீங்கின, 'களங்கொளக் கழல்பறைந்தன' ச.

பனங்குடை - பனையோலையாற்செய்யப் படுமுண்கலம், 'இரும்பனங் குடையின் மிசையும்' ௧௭௭.

பனிக்கும் - நடுங்கும், 'அரசு தலைபனிக்கு மாற்றலை' ௬௨; 'மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளி' ௧௪௫.

பனிச்சை - கழன்மணியினதுகனியாற் கூறுபடுத்துச் சுருட்டப்பட்ட கூந்தல், 'கழற்கனி வகுத்த துணைச்சில் லோதிக் குறுந்தொடி மகளிர்' ௬௭.

பனுவல்-இசைப்பாட்டு, 'வரிநவில் பனுவல் புலம்பெயர்ந் திசைப்ப' ௧௬௫. கேள்வி, 'செவிமுதல் வித்திய பனுவல்' ௨௬௭. சுகிர்ந்தபஞ்சு, 'பருத்திப் பெண்டின் பனுவ லன்ன' ௧௨௫. பாட்டு, 'பாடின் பனுவற் பாணர்' ௧௨௭.

பனைப்போழ் - பனந்தோடு, 'மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇ' ௨௨.

## பா.

பா - பரப்பு, 'பாவடி' ௧௫; ௭௨.

பாசவல் - செவ்வியவல், 'பாசவன் மொக்கி' ௬௩.

பாசறை - பாடிவீடு, 'பாசறை யல்லது நீயொல் லாயே' ௩௩; 'இடங்கெட வீண்டிய வியன்கட் பாசறை' ௬௨.

பாசி=பிராசி - கிழக்கு, 'பாசிச் செல்லாது' ௨௨௯.

பாடிற்று - கூறிற்று, 'அறம்பா டிற்றே' ௩௪.

பாடினி - பாணிச்சி, 'பாடினி யணியாள்' ௨௪௨; விறலி, 'இழைபெற்ற பாடினிக்கு' ௧௧.

பாடு - ஒலி, 'பாடிமிழ் பனிக்கடல்'௬௯. செவ்வி, 'பெரும்பாட் டீரத்து' ௧௨0 முறைமை, 'பாடறிந் தொழுகும் பண்பி னோரே' ௧௬௭.

பாடுகம் - பாடுவேம், 'பாடுகம் வம்மினோ' ௩௨.

பாடுநர் - புலவர், 'பாணர் பாடுநர் பரிசிலர்' ௧௩௫.

பாண்டியன்மறவன் - காலெழுவன்நாகன், 'திருவீழ் நுண்பூட் பாண்டியன் மறவன்' ௧௭௯.

பாண்டில் - கிண்ணி, 'கழற்பாண்டில்' ௬௭.

பாணி-ஓசை, 'ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப' ௧௬௪. தாளம், 'படுமிரா யின்சீர்ப் பாணி தூங்கும்' ௨0௯.

பாமுளூர்-இது சேரநாட்டிலுள்ள தோரூர்; ௨0௩.

பாய்தல் - பரவுதல், 'தேம்பாய் புன்னை' ௨௪.

பாயுந்து - பாயும், 'தெண்கடற் றிரைமிசைப்பாயுந்து' ௨௪.

பார் - முரம்புநிலம், 'ஊர்நனி யிறந்த பார்முதிர் பறந்தலை' ௨௬௫; வண்டிப்பார், 'தால்பார் கோத்து' ௧௮௫; வலியநிலம், 'பாருடைத்த குண்டகழி' ௧௪.

பார்வல் - பார்த்தல், 'பார்வலிருக்கை'

பாரம் - பரிக்கப்படுஞ்சுற்றம், 'பாரமுமிலமே' ௧௪௫.

பாரி - ஒருவள்ளல், 'பாரிவேள்பாற்பாடினை செலினே' ௧0௫; 'கடவன் பாரி கைவண் மையே' ௧0௬; 'பாரி பாரியென்றுபல வேத்தி' ௧0௭; பாரியும் பரிசில ரிரப்பின் வாரே னென்னான்' ௧0௮; 'பாரியது பறம்பே' ௧0௯; 'யாமும் பாரியு முளமே' ௧௧0; 'பாரி மாய்ந்தெனக் கலங்கிக் கையற்று' ௧௧௩; 'பாரிய தருமை யறியார்' ௧௧௬; 'பறம்பிற் கோமான் பாரியும்' ௧௫௮; 'கைவண் பாரி' ௨0௨; 'மலைகெழு மாவண் பாரி' ௨௩௬.

பாரிமகளிர், பரந்தோங்கு சிறப்பிற் பாரி மகளிர' ௨00; 'நெடுமாப் பாரி மகளிர்' ௨0௧; 'கைவண பாரி மகளி ரென்ற' ௨0௨.

பால் - பக்கம், 'பானின்று' ௨௨. விதி, 'பாறர வந்த பழவிறற் றாயம்' ௭௫; 'வாழியெற் புணர்ந்த பாலே' ௧௯௬.

பாவை - கண்மணிப்பாவை, 'புரப்போர் புன்கண் பாவை சோர' ௨௩௫.

பாறிய - துணியாகிய, 'பாறிய சிதாரேன்' ௧௫0.

## பி.

பிசிர் - இது பாண்டிநாட்டிலுள்ளதோரூர், 'இரும்பிசி ராந்தை யடியுறையெனினே' ௬௭; 'தென்னம் பொருப்பனன் னாட்டுள்ளும், பிசிரோனென்ப வெனுயிரோம்புநனே' ௨௧௫.

பிசிராந்தை - ஒருபுலவர், 'இரும்பிசிராந்தை யடியுறை' ௬௭.

பிட்டன் - பிட்டங்கொற்றன், 'மலைகெழு நாடன் கூர்வேற் பிட்டன்' ௧௭0;

'வன்புல நாடன் வயமான் பிட்டன்' ௧௭௨.

பிடர் - கழுத்து, 'யானையிரும் பிடர்த் தலை யிருந்து' ௬.

பிடவூர் - சோழநாட்டிலுள்ள தோரூர், 'நெடுங்கை வேண்மா னருங்கடிப் பிடவூர்' ௬௬௫.

பிடி - கைக்கீட்டு=கைப்பிடி, 'தோல்கழியொடு பிடிசெறிப்பவும்' ௬௮.

பிண்டம் - எண்வகை யெச்சத்துளொன்று; மணைபோலப் பிறப்பது, 'உறுப்பில் பிண்டமும்' ௨௮.

பிணி - கட்டு, 'பிணியுறு முரசம்' ௨௫. நோய், 'பெண்டிரும் பிணியுடையீரும்' ௯.

பிணிக்கொண்ட - கட்டுதலைச்செய்த, 'கயிறுபிணிக் கொண்ட' ௬

பிணிமுகம் - மயில், முருகக்கடவுள் ஏறும்யானையென்றுமாம், 'பிணிமுக வூர்தி யொண்செய் யோனும்' ௫௬.

பிணை - பெண்மான், 'பெருங்கண் மாப் பிணை' ௨.

பிழையாத - தவறாத, 'செங்தொடை பிழையா வன்க ணாடவர்' ௬.

பிற்றைநிலை - வழிபாட்டுநிலை, 'பிற்றை நிலை முனியாது கற்றனன்றே' ௧௮௩.

பிறக்கு - பிறப்பேன், 'மாறியான் பிறக்கே' ௭௧. பின், 'நசைபிறக் கொழிய' ௧௫

பிறங்கிய - செறிந்த, 'மரம் பிறங்கிய நளிச்சிலம்பில்' ௧௩௬.

பிறங்குதல் - உயர்தல், 'பிறங்குநிலை மாடத் துறந்தை' ௬௯. மிகுதல், 'பிறங்குநீர்ச்சேர்ப்பினும்' ௪௯

பிறர் - பகைவர், 'பிற ரகன்றலை நாடே' ௭; 'பிறரோம் புற்ற மன்னெயில்' ௪௦. வேற்றரசர், 'பிறர்மண் கொண்டு' ௧௨.

பின்றை - பின்பு, 'பாண்முற் றொழிந்த பின்றை' ௨௯.

## பீ.

பீடு - பெருமை, 'பீடுடைய வெறழ் முன்பின்' ௧௭; 'பீடுகெழு வேந்தே' ௬௫; 'பீடுஞ் செம்மலு மறியார்' ௭௬ வலி, 'வேந்துபீ டழுத்த வேந்துவேற் றானை' ௨௨௫.

பீரை - பீர்க்கு, 'பீரை நாறிய சுரையிவர் மருங்கின்' ௧௧௬.

பீலி - மயிலின்றோகை, 'மஞ்ஞை யுகுத்த பீலி' ௧௩.

பீள் - சூல், 'கருந்தாள் போகி யொருங்குபீள் விரிந்து' ௧௨௦.

## பு.

புக்கில் - புகலிடம், 'துகளறு கேள்வி யுயர்ந்தோர் புக்கில்' ௨௨௧.

புகர் - யானைமத்தகத்துப்புள்ளி, 'புகரணிநுதல்' ௬.

புகர்க்கலை - புள்ளிமான்கலை, 'புழற்றலைப் புகர்க்கலை யுருட்டி' ௧௫௨.

புகல - விரும்ப, 'கிளைபுகலத் தலைக்கூடியாங்கு' ௧௭.

புகலுதல - விரும்புதல், 'நெஞ்சுடைய புகனமறவரும்' ௫௫.

புகலும் - விரும்பும், 'போரெனிற் புகலும் புனைகழன் மறவா' ௬௧.

புகவு - உணவு, 'அகநாட் டண்ணல் புகவே' ௨௪௯.

புகழ்-கீர்த்தி, 'சேண்விளங் கும்புகழ்' ௧௦.

புகழ்மேம்படுநன் - புகழை மேம்படுத்துமவன், ௪௮

புகார் - ஆற்றுமுகம், 'புகாஅர்ப் புகுந்த பெருங்கலம்' ௬௦

புடைபெயர்தல் - கீழ்மேலாதல், 'நிலம் புடை பெயர்வ தாயினும்' ௩௪.

புடையல் - மாலை, 'இரும்பனம்புடையல்' ௯௯.

புணர்தல் - பொருந்துதல், 'குரல்புணர் சீர்க் கொளைவல்பாண் மகனும்' ௧௧.

புணரி - அலை, 'வெண்டலைப் புணரி' ௨; ௬௧

புணரியோர் - கூட்டினவர்கள், 'நீரு நிலனும் புணரியோர்' ௧௮.

புத்தேள் - தெய்வம், 'புத்தே ளுலகத் தற்று' ௨௨.

புதல்வர் - பிள்ளைகள், 'பொன்போற் புதல்வர்' ௯; 'புன்றலைப் புதல்வர்' ௬௦

புதவு - கதவு, 'புனலம் புதவின்' ௨௪.

புதுவது - புதிது, 'புதுவதோ வன்றே' ௪௨; 'தொலைதலும் புதுவ தன்று' ௭௬.

புயத்து - பிடுங்கி, 'புயத்தெறி கரும்பின்' ௨௮.

புரந்த - உண்டாக்கப்பட்ட, 'ஒள்ளழற் புரந்த தாமரை' ௧௧; 'அழல்புரந்த வடந்தாமரை' ௨௯.

புரவலை - பாதுகாப்பாய், 'இரவலர் புரவலை நீயு மல்லை' ௧௬௨.
புரவி - குதிரை, 'அலங்குளைப் புரவி' ௨.
புரவு - அரசிறை, 'குடிபுர விரக்குங் கோலே னாகுக' ௭௫; விளைநிலம், 'புரவுத்தொடுத் துண்குவை யாயினும்' ௨௬௦.
புரி - முறுக்கு, 'புரியடங்கு நரம்பின்' ௧௩௫.
புரிசை - மதில், 'ஏந்துகொடி யிறைப்புரிசை' ௧௭; 'பல்படைப் புரிசை' ௨௨௪.
புரிதல் - ஆராய்தல், அறம்புரிந் தன்ன செங்கோ லாட்டத்து' ௩௫.
புரிந்து - விரும்பி, 'நயம்புரிந் துறையுநர்' ௧௪௫.
புரை - குற்றம், 'புரையி னற்பனுவல்' ௧௫; 'புரைதீர்ந் தன்றது புதுவதோ வன்றே' ௪௨.
புரைமை - உயர்ச்சி, 'நீயளந் தறிதிநின் புரைமை' ௩௬; 'மன்பதை காக்கு நின் புரைமை நோக்காது' ௨௧௦.
புல்லாற்றூர் - ஓரூர், ௨௧௩.
புல்லென் கண்ணர் - புற்கென்ற கண்ணர், ௭௮.
புல்லென்சடை - புற்கென்ற சடை, ௨௫௨.
புல்லென்றனை - பொலிவழிந்தாய், 'புல்லென் றனையால் வளங்கெழு திருநகர்' ௨௦௩.
புலம் - அறிவு, 'புலவரை யிறந்த புகழ்சா லோன்றல்' ௨௧. இடம், 'புலங்கெட விறுக்கும் வரம்பி லானை' ௧௬. திசை, 'தென்புல வாழ்நர்க்கு' ௯.
புலம்பு - தனிமை, 'புலம்புகொண் டுறையும்' ௧௪௭.
புலர்தல் - உலர்தல், 'புலர்சாந்தின்' ௩.
புலவர் - அறிவுடையோர்' ௧௨.
புலவு - புலால், 'புலவுநாற்றத்த பைந்தடி' ௧௪.
புலவுதி - வெறுத்தி, 'புலவுதி மாதோ நீயே' ௨௧௩.
புலன் - அறிவு, 'புலனழுக் கற்ற வந்தணாளன்' ௧௨௬.
புலனுழுதுண்மார் - அறிவாலுழுதுண்ணுங்கற்றோர், 'புலனுழு துண்மார் புன்க ணஞ்சி' ௪௬.
புலிகடிமால் - இருங்கோவேள், 'ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல்' ௨௦௧; ௨௦௨: ஒரு முனிவர் தவஞ்செய்து கொண்டிருக்கையில், புலியொன்று அவரைக்கொல்லவர, அவர் இவனை நோக்கி (ஹொய்ஸள) இப்புலியைக் கொல்லென்று கட்டளையிட, இவன் அதனைக்கொன்றமையின், இவனுக்கு இப்பெயர் வந்ததென்று பழையசிலாசாதன ஆராய்ச்சியையுடையோர் கூறுவர். இதன்விரிவை அவரிடம் கேட்டுணர்க.
புலைத்தி - புலைமகள், 'முருகுமெய்ப் பட்ட புலைத்தி போல' ௨௫௯.
புழல் - துளை, 'புழற்றலைப் புகர்க்கலையுருட்டி' ௧௫௨.
புழுக்கு - இறைச்சி, 'யாமைப் புழுக்கின்' ௨௧௨.
புழை - காட்டுவாயில், 'கவைமுள்ளிற் புழையடைப்பவும்' ௯௮.
புற்கை - மிக்கநீரால் அடப்பட்ட உணவு, 'நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே' ௬௪.
புறக்கொடுத்து - முதுகிட்டு, 'புறக்கொடுத் திறத்தி' ௮.
புறங்காப்ப - பாதுகாப்ப, 'மெலிவில் செங்கோ னீபுறங் காப்ப' ௪௨.
புறஞ்சிறை - வேலிப்புறம், 'புறஞ்சிறை மாக்கட்கு' ௨௮.
புறத்தை - முதுகையுடையை, 'ஆவஞ் சேர்ந்த புறத்தை' ௧௪.
புறந்தருநர் - பாதுகாப்பார், 'பகடு புறந்தருநர் பார மோம்பி' ௩௫.
புறந்தரும் - பாதுகாக்கும், 'அழல்புறந் தரூஉ மந்தண ரதுவே' ௧௨௨.
புறப்புண் - மார்பில்லைத்துருவியபுண், 'புறப்புண் ணாணி' ௬௫.
புறம் - புறக்கொடை, 'துப்புறுவர் புறம்பெற் றிசினே' ௧௧.
புன்கண் - வறுமை, 'புன்கணஞ்சி' ௪௬.
புன்கம் - சோறு, 'பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கி' ௩௪; 'சாந்த விறகி னுவித்த புன்கம்' ௧௬௮.
புனல் - நீர், 'தண்புனல் பரந்த பூசல்' ௭; 'தண்பொருநைப் புனற்பாயும்' ௧௧.
புனைதல் - அலங்கரித்தல், 'புனைதேர் பண்ணவும்' ௧௨. அழகு செய்தல், 'பொன்னியற் புனைதோட்டியால்' ௧௪. செய்தல், 'வரிமணற் புனைபாவைக்கு' ௧௧.

## பூ.

பூ - புகர், 'பூநுத - லாடியல் யானை' கசரு. பொலிவு, 'பூநிறக் கவசம்' கரு. மலர், 'குலவுச்சினைப் பூக்கொய்து' கக. யானைநெற்றிப்பட்டம், 'பூநுத லியானை யொடு' கஉ.

பூக்க - பொலிவதாக, 'பூக்கநின் வேலே' உரு.

பூங்குன்றம் - ஒருமலை, ககரு.

பூசல் - ஆரவாரம், 'மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல்' உரு; 'ஆசா கென்னும் பூசல் போல' உசுசு ஓசை, 'தண்புனல் பரந்த பூசல்' எ.

பூஞ்சாற்றூர் - இதுசோழநாட்டுள்ளதோரூர்' கசுசு.

பூட்கை - மேற்கோள், 'அறத்தாறு நுவலும் பூட்கை' க; 'பூட்கை யில்லோன் யாக்கை போல' சுக.

பூட்டு - பிணிப்பு, 'கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட்டு' கசக.

பூவாவஞ்சி - கருவூர், 'பூவாவஞ்சியுந்தருகுவன்' ருஉ

பூழி - புழுதி, 'பூழி மயங்கப் பலவுழுது வித்தி' கஉ0; கடுங்கட் கேழ லுழுத பூழி' கசுஅ.

## பெ.

பெட்டாங்கு - விரும்பியபடியே, 'பெட்டாங் கீயும் பெருவளம் பழுனி' ககரு.

பெட்பு - பேணுதல், 'பெட்பின் றீதல் யாம்வேண லமே' உ0ரு.

பெண்-மனைவி, 'பெண்ணீற் றுற்றென' அஉ.

பெண்டிர் - மகளிர், 'பெண்டிரும் பிணியுடை யீரும்' க.

பெண்ணை - பனை, 'செழுங்கோட் பெண்ணைப் பழந்தொட முயலும்' சுக. ஓர் ஆறு, 'பெண்ணையம் படப்பை நாடுகிழ வோயே' கஉசு.

பெய்மார் - வார்க்கவேண்டி, 'பாணர் மண்டை நிறையப் பெய்மார்' ககரு

பெயர்க - பெயர்வாளாக, 'நோயில ராகிப் பெயர்கதி லம்ம' கரு.

பெயர்த்தும் - பின்னும், 'நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்துநின்-வெண்டலைப் புணரிக் குடகடற் குளிக்கும்' உ.

பெயர்தல் - பிறழ்தல், 'நிலம்பெயரினு நின்சொற் பெயரல்' ரு.

பெயர்பு - கிளர்ந்து, 'பெயர்பு பொங்க' உஉ.

பெயர்புறம் - சரிந்து மீளும் புறக்கொடை, 'வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்து' ருரு.

பெயரல் - பிறழாதொழியல்வேண்டும், 'நிலம்பெயரினு நின்சொற் பெயரல்' ரு.

பெயரிய - பெயர்கூறிய, 'கோவெனப் பெயரிய காலை' கருஉ. பெயர்த்த, 'தோல்பெயரிய வெறுழ்முன்பின்' எ.

பெயல் - மழை, 'உறைவேண்டு பொழுதிற் பெயல்பெற் றோரே' ருரு; 'காரப்பெயற் கலித்த' கஉ0.

பெருங்காடு - புறங்காடு, 'பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீமம்' உசுசு.

பெருங்குன்றூர் - ஓரூர், கசஎ, உக0, உசுசு, ருகஅ.

பெருங்கோக்கிள்ளி - கோப்பெருஞ்சோழன், 'பெருங்கோக் கிள்ளி கேட்க' சுஎ.

பெரும்பிறிது - இறந்துபடுதல், 'பேழ்வா யுழுவையைப் பெரும்பிறி துறீஇ' கருஉ.

பெரும்பேது - இறந்துபாடு, 'வெந்திறற் கூற்றம் பெரும்பே துறப்ப' உருஅ.

பெருமிதத்தை - செருக்கினையுடையையாயிராநின்றாய், 'நினதென விலைநீ பெருமிதத் தையே' கஉஉ.

பெருமிதம் - மிக்கமனச்செருக்கு, 'பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ' சு0.

பெருவங்கியம் - ஒருவகைவாத்தியம்; இது யானையின் துதிக்கைபோலும் வடிவையுடையது, 'கண்விடு தூம்பிற் களிற்றுயிர் தொடுமின்' கருஉ.

பெற்றிசின் - பெற்றாள், 'சீருடைய விழைபெற் றிசினே' கக. பெற்றான், 'வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே' கக.

பெறலருங்குரைத்து - பெறுதற்கரிது, 'அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே' ரு.

## பே.

பேகன் - வையாவிக்கோப்பெரும்பேகன்; இவன் ஒருவள்ளல், 'கடாஅ

யானைக் கலிமான் பேகன்' ௧௪௧, 'கடாஅ யானைக் கழற்காற் பேகன்' ௧௪௨; 'கைவள் ளீகைக் கடுமான் பேக' ௧௪௩; 'வயங்குபுகழ்ப் பேகன்' ௧௪௪; 'கடாஅ யானைக் கலிமான் பேக' ௧௪௫, 'அடுபோர்ப் பேக' ௧௪௬; 'பெருங்க ணூடன் பேகனும்' ௧௫௮.

பேணி - பாதுகாத்து, 'பேணித், தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்' ௯.

பேர் - தோற்றப்பொலிவு, 'பேருடைய விழுக்கழஞ்சின்' ௧௧.

பேரலையம - இஃது அலையமென்னும் நகரத்தின் ஒருபாகம், ௨௦௨.

பேழ்வாய் - பெரியவாய், 'பேழ்வா யுழுவை' ௩௩; ௧௫௨.

பேறு - பெற்றபொருள், 'பேறியா தென்னேன்' ௧௫௪.

## பை.

பைஞ்ஞிணம் - செவ்வியையுடையநிணம், 'பைஞ்ஞிணம் பெருத்த பசுவெள்ளமலை' ௧௭௭.

பைதல - துன்பம், 'எவ்வங் கரக்கும் பைதன் மாக்களொடு' ௪௧.

பைதறுகாலை - பசுமையற்றகாலம், 'கோடை நீடிய பைதறு காலை' ௧௭௪.

பைந்தடி - செவ்வித்தசை, 'புலவுநாற்றத்த பைந்தடி' ௧௪.

பையாப்பு - துன்பம், ௨௨௧.

பையென்றன - ஒளிமழுங்கின, 'பாடுநர் கடும்பும் பையென் றனவே' ௨௩௮.

பையென - மெல்ல, 'பையென, வென்னை வினவுதி யாயின்' ௬௧.

## பொ.

பொகுவல் - ஒருபறவை, 'செவிசெஞ் சேவலும் பொகுவலும்' ௨௩௮.

பொங்க - மேன்மேற்கிளர, 'நெய்மலி யாவுதி பொங்க' ௧௫.

பொடிந்த - வெறுத்த, 'பொடிந்தநின் செவ்வி காட்டென' ௧௩௦.

பொத்திய - மூட்டிய, 'கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து' ௨௪௭.

பொத்து - புரை, 'பொத்தி னண்பிற் பொத்தியொடு கெழீஇ' ௨௧௨.

பொதி - பட்டை, 'பைங்கழை பொதி களைந் தன்ன விளர்ப்பின்' ௨௫௩.

பொதியம் - பொதியின்மலை, 'பொதியமும் போன்றே' ௨; 'தென்னம் பொருப்பன்' ௩௩; 'கழுவொடி யாஅய் மழைதவழ் பொதியில்' ௧௨௮; 'தென்னம பொருப்பன்' ௨௧௫.

பொதியில் - அம்பலம், 'பலிகண் மாறிய பாழ்படு பொதியில்' ௫௨.

பொது - மன்று, 'பொதுவிற் றூங்கும் விசியுறு தண்ணுமை' ௮௯.

பொதுச்சொல் - பூமி பிறவேந்தருக்கும் பொதுவென்னும்வார்த்தை, 'போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅன்' ௮.

பொதுமொழி - உறுதியில்லாதவார்த்தை, 'நொதும லாளா பொதுமொழி கொள்ளாது' ௩௫. சிறப்பில்லாதமொழி, 'ஏதின் மாக்கள் பொதுமொழி கொள்ளாது' ௫௮.

பொர - மாறுபட, 'கண்பொர விளங்கு நின் விண்பொரு வியன்குடை' ௩௫.

பொருத - பொரப்பட்ட, 'கறும்பொருத செவ்வாயான்' ௪.

பொருதல - முட்டுதல், 'விண்பொருபுகழ் விறல்வஞ்சி' ௧௧.

பொருது - சண்டைசெய்து, 'ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழிய' ௨.

பொருந்தி - அடைந்து, 'வந்தடி பொருந்தி' ௧௦.

பொருந்தில் - ஓரூர், ௫௩

பொருநா - சண்டைசெய்வார், 'பொருநர்க் கிருநிலத் தன்ன நோன்மை' ௧௪. பகைவர், 'அருநரை யுருமிற் பொருநரைப் பொறு' ௫௮.

பொருநன் - அரசன், 'அறந்துஞ் சுறந்தைப் பொருநனை யிவனே' ௫௮; 'மன்பதை புரக்கு நன்னாட்டுப் பொருநன்' ௬௮. பொருவான், 'பொருநனு மிளையன்' ௭௮. வீரன், 'எம் முளு முளனொரு பொருநன்' ௮௭.

பொருநை - ஆனபொருநதமென்னும் ஆறு; இது கருவூர்க்குச்சமீபத்திலோடுவது, 'தண்பொருநைப் புனற்பாயும, விண்பொருபுகழ் விறல்வஞ்சி' ௧௧; 'வஞ்சிப் புறமதி லலைக்குங், கல்லென பொருநை மணலினும்' ௩௮௭.

பொலம் - பொன், 'பொலம்பூந் தும்பை' ௨; 'பொலங்குழை யுழிஞை' ௫௦.

பொலிந்த - சிறந்த, 'தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே' ௧.

பொழிந்து - பொழிந்தேன், 'கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினும்' ௨௦௯.

பொறி - இலக்கணம், 'பல்பொறிக் கொண்ட வேந்தெழி லகலம்' ௧௬௪. இலாஞ்சனை, 'கோண்மாக் குயின்ற சேண்விளங்கு தொடுபொறி' ௫௮. எந்திரம், 'இரும்புலி வேட்டுவன் பொறியறிந்து மாட்டிய, பெருங்கல் லடாரும்' ௧௯. ஒளி, 'கண்பொறி போகிய' ௧௬௪. கொளுத்து, 'புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய' ௧௩.

பொறுத்தல்-தாங்குதல், 'கொழுநிழ னெடுஞ்சினை வீழ்பொறுத் தாங்கு' ௫௮.

பொறை - சிறுகுவடு, 'அறையும் பொறையு மணந்த தலைய' ௧௧௮.

பொறையன் - சேரன், 'களங்கொள் யானைக் கடுமான் பொறைய' ௫௩.

பொறையாறு - ஓரூர், ௩௯௧.

பொன் - இரும்பு, 'பொன்னியற் புனைதோட்டி' ௧௪, 'விளங்குபொன் னெறிந்த நலங்கிளர் பலகை' ௧௫; 'பொன்புனை திகிரி' ௨௩௩.

## போ.

போகம் - நுகரும் இன்பம், 'போகம் வேண்டி' ௮.

போகிய - ஒழிந்த, 'மலைத்தல் போகிய சிலைத்தார மார்ப' ௧௦. ஓங்கிய, 'கள்ளி போகிய களரியம் பறந்தலை' ௨௩௭.

போந்தை - பனை, 'முழாவரைப் போந்தை' ௮௫.

போழ் - வார், 'போழ்தூண் டூசி' ௮௨.

போழ்க - பிளக்கப்படுவதாக, 'போழ்கென் னாவே' ௧௩௨.

போற்றார் - பகைவர், 'போற்றார்ப் பொறுத்தலும்' ௨.

போன்ம் - போலும், 'போன்மென விரும்பி' ௧௧.

போன்றன - ஒத்தன, 'இலக்கம் போன்றன' ௪.

போன்று - ஒத்து, 'இமயமும் பொதியமும் போன்றே' ௨.

## பௌ.

பௌவம் - கடல், 'தொன்றுமுதிர் பௌவம்'௬; 'இமிழ்திரைப் பௌவம்'௮௮.

## ம.

மகளிர் - பெண்டிர், 'மகளிர் மலைத்த லல்லது' ௧௦.

மகிழ்சிறந்து - உண்டு, 'தண்கமழ் தேறன் மடுப்ப மகிழ்சிறந்து' ௨௪.

மகிழ்ந்து - உண்டு, 'வாங்கமைப் பழுனிய தேறன் மகிழ்ந்து' ௧௨௧.

மங்குல் - இருட்சி, 'மங்குன் மாப்புகை' ௧௦௩.

மங்கையர் - மகளிர், 'வாலிழை மடமங்கையர்' ௧௧.

மஞ்ஞை - மயில், 'பழன மஞ்ஞை யுகுத்த பீலி' ௧௩; 'மஞ்ஞை - யொலி நெடும் பீலி' ௫௦.

மட்டு - மது, 'வெப்புடைய மட்டுண்டு' ௨௪. மதுவைக்கும்சாடி, 'மட்டுவாய் திறப்பவும்' ௧௧௩.

மடங்க - இறைஞ்ச, 'இசழ்பாடுவோ ரெருத்த மடங்க' ௪௦.

மடம் - பேதைமை, 'வாலிழை மடமங்கையர்' ௧௧. மென்மை, 'தெறிநடை மடப்பிணை' ௨௩; 'மடத்தகை மாமயில' ௧௪௫; 'மடப்பிடி' ௧௫௧.

மடல் - பனங்கருக்கு, 'ஒழிமடல் விறகிற் கழிமீன் சுட்டு' ௨௩.

மடவர் - யாதும் அறிவிலலாதார், 'மடவர் மெல்லியர் செல்லினும்' ௧௦௬.

மடவரல் - மடப்பம், 'மடவர லுண்கண் வாணுதல் விறலி' ௮௩.

மடவோன் - அறிவிலலாதோன், 'உள்ள மெள்ளிய மடவோன்' ௭௩.

மடிவிலை - சோம்புதலையுடையாயல்லை, 'ஒடியா முறையின் மடிவிலை யாகி' ௨௩.

மடுப்ப - ஊட்ட, 'ஒண்டொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்து' ௫௬.

மடை - ஆணி, 'மடைகலங்கி நிலைதிரிந்தனவே' ௬௭. கொளுத்து, 'மடை செறி முன்கைக் கடகம்' ௧௫௦.

மண - அணு, 'மண்டிணிந்த நிலனும்' ௨.

மண்டி - மடுத்து, 'நுதிமுக மழுங்க மண்டி' ௩௧. மிக்குச்சென்று, 'கடற்படை குளிப்ப மண்டி' ௬.

மண்டிய - அடர்த்துச்செய்த, 'அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்' ௬௨.

மண்டிலம் - சூரியமண்டிலம் சந்திர மண்டிலம், 'யாங்கன மொத்தியோ வீங்குசெலன் மண்டிலம்' ௮. பார் வட்டம, 'பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும்' ௩௦.

மண்டை - பாணர்கையிலுள்ள ஏற்கும் பாத்திரம், 'கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரென' க0ரு; 'பாணர் மண்டை நிறையப் பெய்மார்' கசரு; 'பருஉக்கண் மண்டையொடு' க௨ரு; 'ஏலாது கவிழ்ந்தவென் னிரவன் மண்டை' கஎகூ.

மண்ணி - முழுகி, 'பனிக்கய மண்ணி' எகூ.

மண்ணினை-மண்ணையுடையை, 'பகைவருணவுரு வருமண் ணினையே' ௨0.

மண்ணுதல் - ஒப்பமிடுதல், 'மண்ணுறு மணி' கசஎ.

மணந்த-சேர்ந்த, 'அறையும் பொறையு மணந்த தலைய' கக௮.

மணி - நீலமணி, 'ஒலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார்' ரு0.

மதவலி - மிக்கவலி, 'மைந்துடை மல்லன் மதவலி முருக்கி' ௮0.

மதன் - மனவெழுச்சி, 'மண்டமர்ப் பரிக்கு மதனுடை நோன்றாள்' எரு. மிகுதி, 'மண்டமர ட்ட மதனுடை நோன்றாள்' ௨கரு. வலி, 'மதனுடை முழுவத்தோ ளோச்சி' ரு1.

மதி - சந்திரன், 'உவவுமதி' ரு.

மதுகை - வலி, 'மதுகை யின்றி' எச.

மதுரை - பாண்டியர்களின் நகரம், ருசு.

மம்மர் - மயக்கம், 'மம்மர் நெஞ்சத் தெம்ம னோர்க்கு' ருரு.

மயக்கி - கலந்து, 'பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கி' ருச.

மயங்கிய - கலந்த, 'தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து' ககூ.

மரபு - தன்மை, 'தெறலரு மரபினின் கிளையொடும் பொலிய' க௨சு. முறைமை, 'நண்டுசெலன் மரபிற் றன்னியல் வழாது' ௨ரு; 'உறுமுறை மரபின்' கூ௮. மேம்பாடு, 'இசைமரபாக' ௨கஎ.

மரீஇய - மருவிய, 'பகைப்புல மரீஇய தகைப்பெருஞ் சிறப்பின்' சுச.

மரீஇயோர் - மருவியவர், 'மரீஇயோ ரறியாது மைந்துபட் டன்றே' கரு.

மருக - மரபினுள்ளாய், 'ஓடாப் பூட்கை யுரவோன் மருக' க௨சு.

மருகனை - மரபினுள்ளாய், 'பலவும் விடுத்தோன் மருகனை' சுசு.

மருங்கு -பக்கம், 'கவிழ்மணி மருங்கின்' ரு; 'கனையெரி யுரறிய மருங்கு நோக்கி' ௨ரு.

மருங்குல் - வயிறு, 'பசிபடு மருங்குலை' ௨சு0.

மருட்கை - வியப்பு, 'நினைக்குங் காலை மருட்கை யுடைத்தே' ௨கஎ.

மருண்டு - பயந்து, 'புன்றலைச் சிறாஅர் மன்றுமருண்டு நோக்கி' சசு.

மருதம் - காலைப்பண், 'மாலை மருதம் பண்ணி' கசகூ.

மருந்து - பரிகாரம், 'மருந்தில் கூற்றத் தருந்தொழில்' ரு; 'மருந்தில் கணிச்சி' ச௨.

மருப்பு - கொம்பு, 'கொல்லேற்றின் மருப்புப்போன்றன' ச. யாழ்க்கோடு, 'நல்லிசை யாழ்மருப்பு' ௨ச௨.

மருள் - எண்வகையெச்சத்துளொன்று; அது அறிவின்றிமயங்கியிருப்பது, 'மாவு மருளும்' ௨௮. ஒப்பு, 'எரிமருளவிர்சடை' ருசு; 'மதிமருள் வெண்குடை' கஎச.

மருள - வியப்ப, 'தாள்படு செல்வங் காண்டொறு மருள' கசுக.

மரை - தாமரை, 'மரையிலை போலமாய்ந் திசினோர் பலரே' ௨எ.

மல்லல் - வளம, 'மல்லன் மூதூர்' க௮.

மலங்கு - ஒருவகைமீன், 'மலங்குமிளிர் செறு' சுக.

மலர்தல் - பரத்தல், 'மலர்தா யத்து' கஎ.

மலைக்குநர் - மாறுபடுவோர், 'சிலைத்தா ரகல மலைக்குந ருளரெனின்' சுக.

மலைத்தல - மாறுபடுத்தல், 'மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப' க0.

மலைத்தனை-பொருதாய், 'மலைத்தனை யென்பது நாணுத்தக வுடைத்தே' ருசு.

மலைய - சூட, 'பாணர் தாமரை மலையவும்' க௨.

மலையன் - ஒருவள்ளல், 'காரி யூர்ந்து பேரமர்க் கடந்த, மாரி யீகை மறப்போர் மலையனும்' கரு௮; இவன், மலையமான் திருமுடிக்காரியென்றும் சொல்லப்படுவான்.

மழகளிறு - இளங்களிறு, 'மைந்துமலிந்த மழகளிறு' ௨௨.

மழலை - இளஞ்சொல், 'புதல்வர்தம மழலை' கூ௨.

மழவர் - வீரர், 'மழவர் பெரும' கூ0.

MAHAMAHOPADHYAYA
Dr. U V S IYER LIBRARY,
BESANT NAGAR, MADRAS-90.
20778



மழித்தலை - மட்டையாகியதலை, 'கொய்ம்மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய' உ௬௧.

மழுங்க - தேய, 'நுதிமுக மழுங்க' ௬௧.

மழுங்கிய - தேய்ந்த, 'நுதிமழுங்கிய வெண்கோடு' ௪.

மள்ள - வீர, 'முழூஉ வள்ளூர முணக்கு மள்ள' உ௧௧.

மள்ளர் - வீரர், 'மள்ளர், மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப' ௧௦; 'உடன்று மேல் வந்த வம்ப மள்ளரை' ௭௭.

மறம் - ஆண்மை, 'மறத்தகை மைந்தரொடு' ௬௯. வீரம், 'மறத்திற் கொல்களிறு' ௬; 'மறம்பாடிய பாடினி' ௧௧.

மறலி - கூற்றம், 'மறலியன்ன களிற்று மிசை யோனே' ௧௬.

மறவை - மறத்தையுடையாய், 'மறவை யாயிற் போரொடு திறத்தல்' ௬௪.

மறுகு - தெரு, 'தாதெரு மறுகு' உ௧௫.

மறுதத - மறுத்தற்கு ஏதுவாகிய, 'மாமறுத்த மலர்மார்பின்' ௭.

மறை - வேதம், 'மறைநவி லந்தணர்' ௧; 'நான்மறை முனிவர்' ௬.

மறைக்கொண்ட - மறைத்தற்குக்கொண்ட, 'வெயின்மறைக் கொண்ட வுருகெழு சிறப்பின் - மாலை வெண்குடை' ௬௦.

மறைக்கொண்டன்றே - மறைத்தற்குக் கொண்டதோ, 'வெண்குடை - வெயின்மறைக் கொணடன்றோ வன்றே' ௬௫.

மன் - நிலைபேறு, 'மன்னுயிர்ப் பன்மையும்' ௧௬. மிகவும், 'சிறந்தன்று மன்னே' ௭௫.

மன்பதை - உயிர்ப்பன்மை, 'மன்பதை காக்குநின்புரைமை' உ௧௦.

மன்ற - தெளிவாக, 'சோற்றோர் மன்ற நின்பகைவர்' உ௬; 'வல்லை மன்ற நீநயந் தளித்தல்' ௫௬. நிச்சயமாக, 'சிறுவரை - சென்றுநின் றோர்க்குந் தோன்று மன்ற' ௧௧௪.

மன்றம் - பொதியில் = பொதுவிடம், 'இரத்தி நீடிய வகன்றலை மன்றம்' ௬௪; 'மன்றப் பலவின்' ௧உ௮. செண்டுவெளி, 'பேரிசை மூதூர் மன்றங் கண்டே' உஉ௦.

மன்னுக - நிலைபெறுவாயாக, 'மன்னுக பெருமநீ நிலமிசை யானே' ௬.

மா·

மா - எண்வகையெச்சத்து ளொன்று; அது விலங்குவடிவாகப் பிறப்பது, 'மாவு மருளு முளப்பட' உ௮. ஒருமாவெண், 'மாநிறை வில்லதும் பன்னாட் காகும்' ௧௮௪. கருமை, 'மாக்கடல்' ௪; 'மாக்கழி மலர்ந்த நெய்தல்' ௪௮. குதிரை, 'மாவே, எறிபதத்தா னிடங்காட்ட' ௪; 'நிமிர்பரிய மாதாங்கவும்' ௧௪. திருமகள், 'மாமறுத்த மலர்மார்பின்' ௭. மாமைநிறம், 'அம்மா வரிவை' ௧௪௭.

மாகம் - ஆகாயம், 'மாக விசும்பு' ௬௫.

மாங்குடி - ஒரூர், உ௪.

மாங்குடிமருதன் - மாங்குடி மருதனார்; இவர் சங்கப்புலவருள் ஒருவர்; பத்துப்பாட்டுள் மதுரைக்காஞ்சி நூலாசிரியர் இவரே, 'ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி, மாங்குடி மருதன் றலைவனாக, வுலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற், புலவர்பா டாது வரைக வென் னிலவரை' ௭உ.

மாட்சி - தன்மை, 'வினைமாட்சிய விரைபுரவி' ௧௬.

மாட்டிய - கொளுத்திய, 'பொறியறிந்து மாட்டிய' ௧௬.

மாதிரம் - திசை, 'மாதிரத் தீண்டிய' ௬௦.

மாமறுத்தமலர்மார்பு - திருமகள் பிறர் மார்பை மறுத்தற்கேதுவாகிய பரந்த மார்பு, ௭.

மாய்ந்திசினோர் - மாய்ந்தோர், 'மாய்ந்திசினோர் பலரே' உ௭.

மாய்ந்தென - மாய, 'தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல்செல் லாது' ௫௮.

மாயா - மறவாத, 'மாயா வுள்ளமொடு' ௧௬௬.

மாரி - மழை, 'மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்' ௬௫.

மால்பு - கண்ணேணி, 'மால்புடை நெடுவரை' ௧௦௫.

மாவன் - ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியனுடைய நண்பருளொருவன்; இவனுடைய ஊர் மையலென்பது, 'பொய்யா யாணர் மையற் கோமான், மாவனும்' ௭௧.

மாவிலங்கை - ஓய்மாநல்லியக் கோடனூர், 'இழுமென வொலிக்கும் புனலம் புதவிற் பெருமா விலங்கைத்

தலைவன் சிறியா, றில்லோர் சொன்ம லை நல்லியக் கோடனை, யுடையை வாழியெற் புணர்ந்த பாலே' கஎசு.

மாறன் - பாண்டியன், 'வேந்துமேம் பட்ட பூந்தார் மாற' ௫௫; 'கடுமான் மாற மறவா திமே' ககூஅ.

மாறு - இறந்துபாடு, 'நசாலென வந்த மாறே' உ௫௬. ஏதுப்பொருள் படு வதோரிடைச்சொல், 'அனையை யாகன் மாறே' ௪. பரிசு=விதம், 'விளங்கக் கேட்ட மாறுகொல்' ௫௦.

மாறோக்கம் - கொற்கையைச் சூழ்ந்த நாடென்பர்; இதுமாறோகமெனவும் வழங்கும், ௬எ, ௬௯, ௧௨௬, உ௮௦.

## மி.

மிச்சில் - ஒழிபொருள், 'கொள்வது கொண்டு கொள்ளா மிச்சில்' உ௬.

மிசை-மேடு, 'அவலா கொன்றோ மிசையா கொன்றோ' க௮எ. மேல், 'மறலியன்ன களிற்றுமிசை யோனே' க௬.

மிசைவு - உணவு, 'அல்கு மிசைவாகும்' உ௬௬.

மிஞிறு - தேனீ, 'மிஞிறார்க்குங் கமழ்கடாம்' உஉ.

மிடறு - கழுத்து, 'கறைமிடறு' க.

மிதவை - கூழ், 'அம்புளிமிதவை' உக௫.

மிலைந்த - சூடிய, 'மெல்லிணர்க் கணணி மிலைந்த மைந்தர்' உ௪.

மிலைந்து - சூடி, 'உழிஞைப் பவரொடு மிலைந்து' எ௭.

மிழலைக்கூற்றம் - இது வேள் எவ்வியினுடையது; கூற்றம் - நாட்டின் உட்பிரிவுக்கு ஓர்பெயர்; 'ஓம்பா வீகை மாவே ளெவ்வி, புனலம் புதவின் மிழலையொடு' உ௪.

மிளிர்தல் - பிறழ்தல், 'மலங்குமிளிர் செறு' ௬க; 'இருநில மிளிர்ந்திசினுஅங்கு' க௬௬.

மிளிர்ந்திட்ட - மறிக்கப்பட்ட, 'படைமிளிர்ந் திட்ட யாமையும்' ௪உ.

மிளிர - பிறழ, 'கொழுங்கிழங்கு மிளிரக் கிண்டி' க௬அ.

மிளை - காவற்காடு, 'கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை' உக; 'போரருங் கடிமிளை' க௮க.

## மீ.

மீக்கூற்றம் - புகழ், 'பொதுமீக் கூற்றத்து நாடுகிழ வோயே' க௬௫.

மீமிசை - மேல், 'கொல்களிற்று மீமிசைக் கொடி' ௬.

மீளி - மறம், 'மீளி முன்பி னாளி' உ௦எ.

மீன் - நட்சத்திரம், 'பன்மீ னாப்பட் டிங்கள் போலவும்' க௩.

## மு.

முக்காவனாடு - ஓர்நாடு, அ௦.

முக்கி - உண்டு, 'பாசவன் முக்கி' ௬௩.

முகம் - இடம், 'இனிய செய்திநின் னார்வலர் முகத்தே' கஉ.

முகிழ்த்தல் - அரும்புதல்.

முகையலூர் - இது சோழநாட்டிலுள்ள தோரூர், க௮க, உ௬௫.

முசுறி - ஓரூர், 'முழங்கடன் முழவின் முசுறி யன்ன' ௬௩௬.

முட்டு - குறை, 'மூவேழ் துறையு முட்டின்று போகிய' க௬௬.

முடியர்-முடிப்பாணக, 'அருந்தொழின் முடியரோ திருந்துவேற் கொற்றன்' கசக.

முண்டகம் - கடல்முள்ளி, 'முண்டகக் கோதை யொணயொடி மகளிர்' உ௪.

முணங்குநிமிர்தல்-மூரிநிமிர்தல், 'முணங்குநிமிர் வயமான' ௫உ.

முணங்குநிமிர்ந்து-மூரிநிமிர்ந்து, 'அணங்கருங் கடுந்திற லென்னை முணங்கு நிமிர்ந்து' எஅ.

முத்தி - முத்தங்கொண்டு, 'புதல்வர் பூங்கண் முத்தி' ௪க.

முத்தூற்றுக்கூற்றம் - இது பழையவேளிர்களுடையது, 'பொன்னணி யானைத் தொன்முதிர் வேளிர், குப்பை நெல்லின் முத்தூறு தந்த' உ௪. இது முத்தூர்க்கூற்றமெனவும் வழங்கும்.

முதல் - இடம், 'சுர்முதல் சேர்ந்த சில்வளை விறலி' ௬௦.

முதற்று - முதலாகவுடையது, 'அறநெறி முதற்றே யரசின் கொற்றம்'

முதாரி - முதுமை, 'முதாரிப் பாண' க௬அ.

முதிர்பு-முதிர்ந்து, 'சூன்முதிர்பு' க௬க.

முதிரம் - ஒருமலை, 'அதிரா யாணர் முதிரத்துக் கிழவ, விவண்விளங்கு சிறப்பி னியறேர்க் குமண' க௫அ; 'நட்டோர் நட்ட நல்லிசைக் குமணன், மட்டார் மறுகின் முதிரத் தோனே'

௧௬௦ ; 'பழந்தூங்கு முதிரத்துக் கிழவன், திருந்துவேற் குமணன்' ௧௬௯.
முந்நீர் - கடல்; ஆற்றுநீரும் ஊற்றுநீரும் மழைநீருமுடையதென்பதுபொருள், 'முந்நீர் விழவி னெடியோன்' ௯; 'முந்நீர் வழங்கு நாவாய்' ௧௯.
முந்துறுத்து - முன்னிட்டுக்கொண்டு, 'பற்று மாக்களிற் பரிவுமுந் துறுத்து' ௨௯.
முந்தை - முன்னே, 'முந்தை நிற்பின்' ௪௦.
முயங்கினேன் - புல்லினேன், 'முயங் கினே னல்லனோ யானே' ௬௬.
முரஞ்சியூர் - ஓரூர், ௨.
முரண் - மாறுபாடு, 'கடுமுரண் முதலை' ௩௭. வலி, 'முரணுடை யுள்ளம்' ௨௦௪.
முரணிய - மாறுபட்ட, 'நீமுரணிய நீரும்' ௨.
முருக்கி - கெடுத்து, 'தோள்வலி முருக்கி' ௧௮; 'மதவலி முருக்கி' ௮௦. முறித்து, 'காப்புடைய வெழுமுருக்கி' ௧௪.
முருகு - தெய்வம், 'முருகுமெய்ப் பட்ட புலைத்தி' ௨௫௯.
முழவு - தண்ணுமை, 'மண்கனை முழவின்' ௧௫. மத்தளம், 'விசிகூடு முழவின்' ௧௫௮.
முழுநெறி - புறவிதழொடிக்கப்பட்ட முழுப்பூ, 'கூம்பவிழ் முழுநெறி' ௧௧௬.
முள்ளூர் - ஓரூர், ௧௭௪.
முள்ளூர்மலை - மலையமான்திருமுடிக்காரியின்மலை, 'பயன்கெழு முள்ளூர் மீமிசைப், பட்ட மாரி யுறையினும்' ௧௨௩; 'பறையிசை யருவி முள்ளூர்ப் பொருந' ௧௨௬; 'எள்ளறு சிறப்பின் முள்ளூர் மீமிசை' ௧௭௪.
முளிதல - உலர்தல், 'முளிபுற்கானங்குழைப்ப' ௧௬௦.
முற்றி-முடித்து, 'வேள்வி முற்றி' ௧௫.
முற்றிய - முடித்த, 'பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே' ௨௧.
முற்றுக - சூழ்வதாக, 'பாண்முற் றுக நின் னுண்மகி ழிருக்கை' ௨௯.
முறை - அடைவு, 'முறைமுறை யாடுநர் கழியுமிவ் வுலகத்து' ௨௯. ஊழ், 'ஆருயிர் - முறைவழிப் படூஉ மென்பது' ௧௯௨. நீதி, 'முறைவேண்டு பொழுதில்' ௩௫.
முன்ப - வலியையுடையோய், 'செருச்செய் முன்ப' ௭௯.
முன்பு - முன்னிடம், 'முன்பு துரந்து' ௧௪. வலி, 'முன்பிற் - கானக நாடனை' ௫; 'கடுந்தார் முன்பு தலைக்கொண்மார்' ௧௫; 'மீளி முன்பி னாளி' ௨௦௭.
முன்றுறை - துறைமுன்னர், 'முன்றுறை நுண்பல மணலினும்' ௧௩௬.
முன்னம் - மனக்குறிப்பு, 'முன்ன முகத்தி னுணர்ந்து' ௩.
முன்னனை - முன்னேநிற்பை, 'தானை முன்னனை யெறுழ்' ௧௬௬.
முன்னீர்-நிலத்திற்குமுன்னாகிய நீர், 'முன்னீர் விழவி னெடியோன்' ௯.
முன்னூர் - ஊர்முன், 'முன்னூர்ப் பழுனிய கோளியா லத்து' ௨௫௪.
முனித்தலை - குடுமித்தலை, 'முனித்தலைப் புதல்வர்' ௨௫௦.
முனிவர் - அந்தணர், 'நான்மறை முனிவர்' ௬.
முனிவிலை - வெறுப்பில்லாய், 'முனிவிலை.........நடத்திசி'
முனிவு - வெறுப்பு, 'முனிவிலர்' ௧௮௨.
முனைஇ-வெறுத்து, 'பனைநிலை முனைஇ' ௨௩, 'அனையகமுனைஇ' ௫௨.
முனையின் - வெறுப்பின்; 'செஞ்ஞாயிற்று வெயின்முனையின்' ௨௪.

## மூ.

மூதாளர் - முதியோர்; 'நரைமூ தாளர்' ௫௨.
மூதிற்பெண்டிர் - முதிய மறக்குடியிற் பிறந்த பெண்டிர், 'மூதிற் பெண்டிர் கசிந்தழ நாண' ௧௯.

## மெ.

மெய் - அறிவு, 'மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல்' ௨௫
மெய்புகுகருவி - கவசம், ௧௩.
மெய்ம்மறந்து - அறிவுமயங்கி, 'மெய்ம் மறந்து பட்ட வரையாப் பூசல்' ௨௫.
மெல்லிய-மென்மையையுடையன, 'மெல்லிய பெரும தாமே' ௧௪.
மெல்லியர் - அற்பகுணங்களையுடையர், வறுமையுற்றோர்; 'மடவர் மெல்லியர் செல்லினும்' ௧௦௬.
மென்புலம் - மருதமும்நெய்தலும், 'மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந' ௭௨.

## மே.

மேந்தோன்றல் - மேம்பட்டதோன்றல், 'இசைமேந் தோன்றல்' கடுக.

மேந்தோன்றிய - மேம்பட்ட, 'இசை மேந் தோன்றிய வண்மை' கடுஅ

மேவலே - விரும்புதலுடையை, 'கொள் ளே மேவலே' எ.

## மை.

மை - இருட்சி, 'மைபடுமருங்குல்' ௫௦. செம்மறியாடு, 'மையூன் மொசித்த வொக்கலொடு' கூசு.

மைந்து - மறம், 'மைந்துபட் டன்றே' கரு. வலி, 'நாடல் சான்ற மைந்தி னோய்' கடு; 'மைந்துடைக் கழை தின் யானே' எரு.

மைம்மீன் - சனிமீன், 'மைம்மீன் புகை யினும்' ககஎ.

மையல் - பாண்டிநாட்டுள்ளதோரூர்; இது மாவனென்பவ னுடையது, 'பொய்யா யாணர் மையற் கோமான், மாவனும்' எக.

மைவிடை - ஆட்டுக்கிடாய், 'மைவிடை வீழ்ப்பவும்' ககரு. செம்மறிக் கிடா ய், 'மைவிடை வீழ்ப்ப' ருரு.

## மொ.

மொசித்த - தின்ற, 'மையூன் மொசித்த' கூசு.

மொய்ப்ப - நெருங்க, 'வாளோர் மொ ய்ப்ப' கரு.

மொழி - வார்த்தை, 'பிறர்பழி கூறு வோர் மொழிதே றலேயே' க0.

மொழிவல் - சொல்லுவேன், 'நின்னொ ன்று மொழிவல்' ௫.

## மோ.

மோசி - ஒருபுலவர்; இவர் உறையூர் ஏணிச்சேரி முடமோசியாரென்றும் சொல்லப்படுவோர், 'திருந்துமொழி, மோசி பாடிய வாயும்' கடுஅ.

மோவாய் - தாடி, 'குச்சி னிரைத்த குரூஉமயிர் மோவாய்' உடுஎ.

## யா.

யா - யாவை, 'யாபல கொல்லோ பெ ரும' கடு.

யாங்கனம் - எவ்வாறு, 'யாங்கன மொ த்தியோ வீங்குசெலன் மண்டிலம்' அ; 'யாங்கன மொழிகோ வோங்கு வாட் கோதையை' சக.

யாணர் - புதுவருவாய், 'யாணர் வைப்பி னன்னாட்டுப் பொருந' உ.

யாணர்த்து - புதுவருவாயை யுடைத்து, 'பெருவிறல் யாணர்த் தாகி' சஉ.

யாத்த - பிணித்த, 'யாதத நண்பினன்' உகசு.

யாமங்கொள்பவர் - இடையாமத்து ஊர் காப்பவர், 'யாமங் கொள்பவர் சுடர் நிழற் கதாஉம்' ருசு.

யாமம் - இடையாமம், 'யாமத்துத், தனி மகன் வழங்காப் பணிமலர்க் காவின்' ருரு.

யாமை - ஆமை, 'படைமிளிர்ந் திட்ட யாமையும்' சஉ; 'அரிக்குட ரரியின் யாமை மிளிர' உசக.

யாய்-தாய், 'முதிர்வின ளியாயும்' கடுக.

யாவணது - எவ்விடத்துள்ளாது, 'இருள், யாவண தோநின் னிழல்வாழ் வோர்க் கே' க0உ.

யாவது-எங்ஙனமாவது, 'அமர்மிக வியா வது' கூஉ.

யாவிர் - எப்பெற்றிப்பட்டீர், 'யாவி ரா யினும்' அஅ.

யான்கண்டனையர் - யான்கருதியவதனை யேகருதுவர், 'யான்கண் டனையரென் னிளையரும்' கருக.

## யூ.

யூபம் - யாகத்தூண், 'யூப நட்ட வியன் களம் பலகொல்' கடு; 'யூப நெடுந் தூண் வேத வேள்வி' உஉச.

## வ.

வசை - பழி, 'வசையில் வாழ்க்கை' க0.

வஞ்சி - கருவூர், 'விண்பொருபுகழ் விற ல்வஞ்சி' கக; 'பூவா வஞ்சியுந் தரு குவ னென் றே' ருஉ; 'வாடா வஞ்சி வாட்டுநின்' ருக; 'வஞ்சி முற்றம் வயக்கள னாக' ருஎரு; 'வஞ்சிப் புற மதி லலைக்கும், கல்லென் பொருநை' ருஅஎ. பகைமேற்செலவு, 'பாடினி பாடும் வஞ்சிக்கு' கடு.

வட்கர் - ஒருறம், 'வட்கர் போகிய வள ரிளம் போந்தை' க00.

வட்கார் - பகைவர், க00.

வட்டி - கடகம், 'மான்றசைச் சொரிந்த வட்டி' ருரு.

வட்டித்து - சுழற்றி, 'மருந்தில் கணிச்சி வருந்தவட் டித்து' சஉ.

வடமலை - இமயமலை, 'வடமலைப் பெயர் குவை யாயின்' ௩௭.
வடமீன் - அருந்ததி, 'வடமீன் புரையுங் கற்பின்' ௧௨௨.
வடாஅது-வடக்கின்கண்ணது, 'வடாஅது பனிபடு நெடுவரை' ௬.
வடி - திருத்தம், 'வானுட்கும் வடிநீண் மதில்' ௧௮. வடித்தல், 'வடிநவி னவியம்' ௨௩.
வடிந்த - அழகுபெற்ற, 'வடுவின்று வடிந்த யாக்கையன்' ௧௮௦.
வடியா - திருந்தாத, 'வடியா நாவின்' ௪௭.
வடு - தழும்பு, 'சாபநோன் ஞாண் வடுக்கொள வழங்கவும்' ௧௪.
வண்ணம் - அழகியநிறம், 'வண்ணமார்ப்பு' ௧. நிறமுடையகலவை, 'வண்ண நீவிய' ௩௨.
வணர் - வளைவு, 'வணர்கோட்டுச் சீறியாழ்' ௧௫௫.
வந்தனம் - வந்தேம், 'எய்தவந் தனம் யாம்' ௧௦.
வந்திசின் - வந்தேன், 'காண்கு வந்திசிற் பெரும' ௧௭. 'எந்தைநிற் காண்குவந் திசினே' ௧௨௫.
வம் - வா, 'நீயும் வம்மோ' ௧௮௦.
வம்பலர் - வழிபோவார், 'வெங்கால் வம்பலர் வேண்டுபுலத் துறையவும்' ௨௩௦.
வம்பு - கச்சு, 'வம்பணி யானை' ௩௭. நிலையின்மை, 'எள்ளி வந்த வம்ப மள்ளா' ௭௮; 'வம்ப மன்னரோ பலரே' ௭௧. புதுமை, 'வம்பப் பதுக்கை' ௩.
வம்மின் - வாரீர், 'பாடுகம் வம்மினோ பரிசின் மாக்கள்' ௩௨.
வயம் - வலி, 'வயவேந்தன்' ௧௧; 'வயமான் றோன்றல்' ௯௪.
வயமான் - புலி, 'முணங்குநிமிர் வயமான்' ௫௨.
வயவர்-வீரர், 'திறலறி வயவரொடு' ௨௦.
வயவு-வேட்கைநோய், 'வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது, பகைவ ருண்ணா வருமண் ணினையே' ௨௦.
வயிரியர் - கூத்தர், 'பசும்பொன் வயிரியர்க் கீத்த' ௯; 'வயிரிய, ரின்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே' ௧௯௪.
வயின் - முறை, 'வயின்வயி, னுடன்று மேல் வந்த வம்ப மள்ளரை' ௭௭.
வரம்பு - எல்லை, 'வரம்பி றானை' ௧௯.
வரால் - ஒருமீன், இது பெருத்தவடிவமுடையது, 'தண்ணுரற் பருவரால்' ௧௮.
வரி - எழுத்து, 'வல்லோன் றைஇய, வரிவனப புற்ற வல்லிப் பாவை' ௩௩. ஒருவகைப்பொருள், 'வரிநவில் பனுவல்' ௧௩௫. வண்டல், 'வரிமணற் புனைபாவைக்கு' ௧௧.
வரிசை - சிறப்பு, 'ஆடுகொள் வரிசைக் கொப்ப' ௫௩. தம்மைப் புரப்போரால்வருஞ்சிறப்பு, 'இவரிசைக்கு வருந்துமிப் பரிசில்வாழ்க்கை' ௪௭. தரம், 'வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு' ௧௮௪; 'வருகென வேண்டும் வரிசை யோர்க்கே' ௨௦௭. மேம்பாடு, 'வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கைப், பரிசிலர்க்கு' ௨௦௬.
வரிவயம் - புலி, 'வரிவயம் பொருத வயக்களிறு போல' ௧௦௦.
வருதி - வருவை, 'மாறி வருதி' ௮.
வருநர் - விருந்தினர், 'வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை' ௧௦.
வருவல் - வந்தேன்; காலமயக்கம், 'கண்டனென் வருவல்' ௨௯.
வரை - எல்லை, 'புலவரை யிறந்த புகழ்சா றோன்றல்' ௨௧; 'சிறுவரை சென்றுநின் றோர்க்கும்' ௧௧௪. மலை, 'பனிபடு நெடுவரை' ௬.
வரைதி - கூறுபடுப்பை, 'பொழுதெண வரைதி' ௮.
வரைப்பு - எல்லை, 'நிலவுக்கடல் வரைப்பின் மண்ணகம்' ௩.
வரையா - அளவில்லாத, 'மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல்' ௨௫. மிகுதிகுறைபடாமல்வழங்கும், 'வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை' ௧௦.
வரையாவீகை - எப்பொருளையும் எல்லார்க்கும் வரையாதுகொடுக்கும் வண்மை, 'வரையா வீகைக் குடவர் கோவே' ௧௭.
வல் - சூதாடுகருவி, 'வல்லி னல்லகம்' ௫௨. வல்ல, 'கொளைவல் பாண்மகன்' ௧௧. விரைவு, 'வழிபடு வோரை வல்லறி தீயே' ௧௦; 'வல்லே நின்வயிற் கிளக்குவ மாயின்' ௧௨௬.
வல்சி-உணவு, 'துழந்த வல்சியின்' ௨௩. வளைகதிர், 'வல்சி கொண்டளை மல்கவைக்கு, மெலிமுயன் றனையர்' ௧௯௦.

வல்லாங்கு - சதுரப்பாடு, 'வல்லாங்கு வாழ்தும்' கசுரு. வல்லபடி, 'வல்லாங்குப் பாடி' சஎ.

வல்லார் - ஒரூர், 'வலாஅரோனே வாய்வாட் பண்ணன்' கஅக. வல்லமையில்லாதவர், 'வல்லா ராயினும் வல்லுந ராயினும்' உஎ; ருஎ.

வல்லார்கண்ணி - சுற்றப்பட்டகண்ணி, உருஉ.

வல்லாள - வலியவாண்மையையுடையோய், 'கள்ளா தார்மிடல் சாய்த்த வல் லாள' கஉரு.

வல்லாளனே - வலிய ஆண்மையையுடையை, 'அடிபொலியக் கழறைஇய வல்லாளனே' சo.

வல்லினும் - அறிவேனுயினும், 'வல்லினும் வல்லே னுயினும்' கசுக.

வல்லுநர்-வல்லமையையுடையவர், 'வல்லா ராயினும் வலலுந ராயினும், ஆங்கது, வல்லுநர் வாழ்ந்தோ ரென்ப' உச; உஎ; ருஎ.

வல்லேம் - வலலமை யில்லேம், 'வல்லே மல்லே மாயினும்' கஉசு.

வல்லே - வல்லமையுடையாய், 'அருள வல்லே யாகுமதி' உஎ; 'வல்லே மனற நீகயந் தளித்தல்' ருக.

வலக்கும் - சூழும், 'வயலுழை மருதின் வாங்குசினே வலக்கும்' ருஉ.

வலந்த - சூழ்ந்த, 'இழைவலந்த பஃறுன்னத்து' கருசு.

வலம் - வலி, 'தாள்வலம் வாழ்த்த' உச. வெற்றி, 'வாள்,வலந்தர மறுப்பட்டன' ச; 'எழுவர் நல்வலங் கடந்தோய்' கக; 'ஏற்றுவல னுயரிய' ருசு; 'வலம்படு வாய்வாள்' கூக.

வலவன் - தேர்ப்பாகன், 'வலவ னேவா வான வூர்தி' உஎ.

வலித்த - கருதிச்செய்யப்பட்ட, 'தச்சன், றிங்கள் வலித்த காலன் ஞேனே'அஎ.

வலியுறுக்கும் - இறுகப்பிடிக்கும், 'வளன்வலி யுறுக்கு முளமி லாளரொடு' ககo.

வலே - யாகபத்தினிகள் நெற்றியிலணிந்துகொள்ளுவது; இதனேச்சாலகமென்பர், 'அறம்புகழ்ந்த வலேசூடி'கசுசு.

வழங்க - அசைய, 'மழகளிறு, கந்து சேர்பு நிலேஇ வழங்க' உஉ. செலுத்த, 'சாப நோன்ஞாண் வடுக்கொள வழங்கவும்' கச.

வழங்கும் - இயங்கும், 'முந்நீர் வழங்கும் நாவாய்' கரு.

வழாஅது-பிழையாமல், 'ஈண்டுசெலன் மரபிற் றன்னியல் வழாஅது' உரு.

வழி - வழிபாடு, 'வலியரென வழிமொழியலன்' உருக.

வழிநாள் - பின்வருநாள், 'வழிநாட் கிரங்குமென் னெஞ்சம்' கஎசு.

வழிபடுவோர் - வழிபட்டொழுகுவோர், 'வழிபடு வோரை வல்லறி தீயே' கo.

வழிமொழிந்து-வழிபாடுசொல்லி, 'வையங் காவலர் வழிமொழிந் தொழுக' அ.

வழிமொழிய - வழிபாடுகூற, 'தொன்று பட்டு வழிமொழிய' கஎ.

வழு - பாதகம், 'வழுவாய் மருங்கிற் கழுவாயு முள' கூச.

வழுதி - பாண்டியன, 'கருங்கை யொள் வாட் பெரும்பெயர் வழுதி' கு; 'சினப்போர் வழுதி' ருக; 'தாடோய் தடக்கைத் தகைமாண் வழுதி' ருகூ.

வழை - சுரபுன்னே, 'வழையொடு நீடி' கருஅ.

வள்பு - வார், 'மாசற விசித்த வார்புறு வள்பின்' ருo.

வள்ளி - வளே, 'ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்' சுரு.

வள்ளியோர் - வண்மையையுடையோர், 'வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற போகி' சஎ.

வள்ளூரம் - தசை, 'மூழூஉ வள்ளூர முணக்கு மள்ள' உகக.

வளம் - செல்வம், 'வளங்கெழு வைப்பின்' எக.

வளவன் - சோழன், 'இயறேர் வளவ' எ; 'பெருவிறல் வளவன்' கஎச; 'திண்டேர் வளவற் கொண்ட கூற்றே' உஉசு.

வளி - காற்று, 'விசும்பு தைவரு வளியும்' உ; 'வளிவழங்கு திசையும்' உo; 'வளிமிகின் வலியு மில்லே' ருக.

வளேஇ-சூழ்ந்து, 'முழுவதூம் வளேஇ' கஅ; 'வையகமுழுதுடன் வளேஇ' சுக.

வளேஇய - சூழப்பட்ட, 'இமிழ்கடல் வளேஇய வீண்டகன் கிடக்கை' கக.

வறம் - நீரில்லாமை, 'கயத்திட்ட வித்து வறத்திற் சாவாது' கசுஎ. வற்கடம், 'பெருவறங் கூர்ந்த வேனிற் காலே' உஉ௪.

வறல் - சுள்ளி, 'வெண்கிடை யென் றூழ் வாடுவறல் போல' எ௫.

வன்கண்மை - தறுகண்மை, 'வன்க ணுடவர்' ௯.

வன்புலம் - குறிஞ்சியும் முல்லையும், 'வன் புலக் கேளிர்க்கு' ௪௨.

வனப்பு - அழகு, 'செவ்வா னத்து வன ப்புப் போன்றன' ௪.

## வா.

வாக்க - வடிக்க, 'வாக்க வுக்க தேக்கட் டேறல்' ௧௧௫.

வாக்கல் - வடிக்கப்பட்டசோறு, 'களை க்கதிர் வரகி னவைப்புறு வாக்கல்' ௨௧௫.

வாட்டாறு - ஓரூர், 'வளநீர் வாட்டாற் றெழினி யாதன்' ௩௯௬.

வாணிகம் - ஊதியம், 'வாணிகப் பரிசில னல்லேன்' ௨௦௮.

வாய் - இடம், 'வாய்கா வாது, பரந்து பட்ட வியன்பாசறை' ௨௨. தாவி, 'வாய்ச்செலவிவுளியொடு' ௧௩௭. மெ ய்ம்மை, 'முதுமுதல்வன் வாய்போ காது' ௧௬௬.

வாய்வாள் - தப்பாதவாள், 'வலம்படு வாய்வா ளேந்தி' ௬௧; வாய்த்தவாள், 'வாய்வாள் வேந்தே' ௨௬.

வாயில் - வழி, 'புகழ்குறை படூஉம் வா யில்' ௧௩௬.

வாயில் விடாது - வாயில்காவலர்க்குச் சொல்லிவிடாமல், 'வாயில் விடாது கோயில் புக்கு' ௬௭.

வார்ப்பு - வார்தல், 'வார்புறு வள்பு' ௫௦.

வாரணம் - கோழி, 'கான வாரண மீ னுங் காடு' ௫௨.

வாரி - விளைவு, 'வாரி குன்றினும்' ௩௫.

வால் - தூய்மை, 'வால்வெள் ளேறு' ௧. 'வாலிழை மடமங்கையர்' ௧௧. வெண்மை, 'வாலிழை மங்கையர்' ௬.

வாலியோன் - பலராமன், 'வலியோத் தீயே வாலி யோனை' ௫௬.

வாலிழை - வெள்ளியமுத்தாரம், ௬.

வாழ்நர் - வாழ்வோர், 'தென்புல வாழ் நர்க்கு' ௯. 'வாளின் வாழ்நர்' ௨௪. 'நிலமிசை வாழ்நர்' ௪௩.

வாழிய-வாழ்வானாக, 'எங்கோவாழிய' ௯.

வாள் - ஒளி, 'வாண்முகத் தெதிரே' ௬.

வான்கதிர் - வாலிய ஒளி, 'வான்கதிர்த் திருமணி' ௧௫௦.

வானம் - மழை, 'வான நாண வரையா து சென்றோர்க், கானு தியும்' ௮௪.

வானவரம்பன் - சேரன், 'வான வரம் பனை நீயோ' ௨.

வானவன் - சேரன், 'சினமிகு தானை வானவன்' ௧௨௬.

வானவூர்தி - விமானம், 'வலவ னேவா வான வூர்தி' ௨௭.

## வி.

விசித்த - வலித்துக்கட்டிய, 'மாசற வி சித்த வார்பறு வளபின்' ௫௦.

விசிப்ப - விம்ம, 'விலாப்புடை மருங்கு விசிப்ப மாந்தி' ௬௧.

விசும்பு - ஆகாயம், 'விசும்புதைவரு வளி யும்' ௨; 'அகலிரு விசும்பி னும்' ௮; 'கொல்களிற்று மீமிசைக் கொ டிவிசும்பு நிழற்றும்' ௯.

விசைப்ப - தள்ள, 'நறுநெய்க் கடலை விசைப்ப' ௧௨௦.

விடர் - குகை, 'பெருமலை விடரகத்து' ௩௭; மலைப்பிளப்பு, 'அருவிடர்ச் சிறு நெறி' ௧௩௫.

விடுத்தேன் - விடைகொண்டேன், 'விடு த்தேன் வாழிய குரிசில்' ௨௧௦.

விடுதும் - செலுத்தக்கடவேம், 'எம்மம்பு கடிவிடுதும்' ௯.

விடுநை - ஒழிவாய், 'அடுநை யாயினும் விடுநை யாயினும்' ௩௬.

விடை - ஆட்டுவிடை, 'விடையும் வீழ் மின்' ௨௬௨.

விண் - ஆகாயம், 'விண்பொருபுகழ்' ௧௧.

வித்தி - விதைத்து, 'வள்ளியோர் செவி முதல் வயங்குமொழி வித்தி' ௨௦௬.

விதிர்த்து - சிதறி, 'நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து' ௧௮௮.

விதிர்ப்பு - நடுக்கம், 'என்போற் பெரு விதிர்ப் புறுக' ௨௫௫.

விதுப்பு - நடுக்கம், 'விதுப்புற வறியா வேமக் காப்பினை' ௨௦; 'என்போற் பெருவிதுப் புறுக' ௫௩. விரைவு, 'விதுப்புறு விருப்பொடு' ௨௧௩. இது விதிர்ப்பெனவும் வழங்கும்.

விம்மி - பொருமி, 'முலையகந் நனைப்ப விம்மி' ௧௪௩.

வியத்தொறும் - வியக்குந்தோறும், 'விய த்தொறும் வியத்தொறும் வியப்பிறந் தன்றே' ௨௧௭.

